# தமிழர் யார்?

ஆசிரியர்:

யாழ்ப்பாணத்து நவாலியூர்

ந. சி. கந்தையா பிள்ளை





விலை அணா 8

மக்தமிழ் நிலையம், சென்னை.

## "நடன சுந்தரி"

பிரபல இளம் நாவலாசிரியரும், 'பிராயச்சித்தம்', 'உயிர்ப்பொம்மை' முதலிய சிறந்த நூல்களின் சிருஷ்டி கர்த்தாவுமான திரு. ப. லக்ஷ்மிநாராயணன் எழுதிய சிறு கதைகளின் தொகுதி இது.

இதில் வரும் ஒவ்வொரு கதையும் சிறந்த கற்பனைத்திறனும், ரஸனம் சுவையுங்கொண்ட அற்புத சிருஷ்டிகளாகும்.

**இதன் விலை ரூ. 1—0—0**

## நனவாகவேண்டிய கனவு

**("குயிலன்" கவிதைகள்)**

நவயுகக் கவிஞர்—நவசக்தி கவிஞர்—"குயிலன்" கவிதைகள் ஒவ்வொன்றும் சமூக சீர்திருத்தம்-காதல்-பொதுவுடைமை—தொழிலாளர் சக்தி—அரசியல் அறிவூட்டும் தமிழ்த் தேன் சொட்டும் கவிதைகள். இவருடைய கவிதைகளைப் பாடுவோர்,

**இவர் ஒரு இளைய பாரதியோ?**

எனப் புகழ்வர்.

**இதன் விலை 1—0—0**

## முத்தமிழ் நிலையம்,

**75,** வரதா முத்தியப்பன் தெரு :: ஜி. டி. சென்னை.

# தமிழர் யார்?



ஆசிரியர்:
யாழ்ப்பாணத்து நவாலியூர்

**திரு ந. சி. கந்தையா பிள்ளை**

[தமிழ் இந்தியா, தமிழர் சரித்திரம், தமிழகம், வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட பழந்தமிழர், நமது நாடு நமது மொழி, சிவன் முதலிய பற்பல நூல்களின் ஆக்கியோன்]

முத்தமிழ் நிலையம்
75, வரதா முத்தியப்பன் தெரு, ஜி. டி. சென்னை
1946

கோட்டூர் வழி, தஞ்சை மாவட்டம்

# முன்னுரை

மேல்நாட்டவர்கள் மக்கள் வரலாற்றை ஒரு கலையாகக் கொண்டு அதனை வளர்த்து வருகின்றனர். அவர்கள் மொழிகளில் மக்கள் வரலாற்றைப்பற்றி ஆயிரக் கணக்கான நூல்கள் எழுதப்பட்டுள்ளன. தமிழ் நாட்டினருக்கு வரலாறு என்பது புதிது. மக்கள் வரலாறுகளோடு கடவுள் கதைகளைத் தொடர்பு படுத்திக் கூறும் பழங்கதைகளைப் போன்றனவே உண்மை வரலாறுகள் என நம்மவர் பெரிதும் நம்பி வருகின்றனர். மக்களின் உள்ளம் இவ்வாறு பழகியிருப்பதினாலேயே பேசும் படக்காட்சிகளுக்கும் இவ்வகைக் கதைகள் தெரிந்து எடுக்கப்படுகின்றன. நம்மவரின் அறிவு, வரலாற்றுத் துறையில் மிகப் பிற்போக்கடைந்திருப்பதினாலேயே, மூடத்தனமான பல பழக்க வழக்கங்கள் நம்மவர்களிடையே வழங்குகின்றன. மூடப் பழக்க வழக்கங்களுக்குக் காரணம், அவைகளின் உண்மை அறியப்படாதிருத்தலே யாகும். பயனற்ற அல்லது பொருளற்ற பழக்க வழக்கங்களின் தொடக்கம் அல்லது காரணம் அறியப்படின் மக்கள் அவைகளைக் கைவிடப் பின்னடைய மாட்டார்கள்.

நமது நாடு, தமிழ் வழங்கும் நிலம். இங்குக் கிராமங்கள் தோறும் வீதிகள் தோறும் ஆலயங்கள் காணப்படுகின்றன. அவ்வாலயங்களில் குருமார் சில சமக்கிருதச் சொற்றொடர்களை உச்சரித்துக் கடவுள் பூசை செய்து வருகின்றனர். அச்சமக்கிருதச் சொற்றொடர்களில் தெய்வீகம், அல்லது கடவுள் தன்மை இருப்பதாகக் கற்றோரும் கல்லாதாரும் நம்பி வருகின்றனர். சமக்கிருதம் என்பது நமது நாட்டு மொழியன்று. இது செர்மன், இலத்தீன், கெல்து முதலிய ஐரோப்பிய மொழிகளுக்கு இனமுடையது; இற்றைக்கு 4000 ஆண்டுக்கு முன் மத்திய ஆசியாவினின்றும் இந்திய நாட்டை அடைந்த ஆரியர் என்னும் அன்னிய மக்கள் பேசிய மொழியின் திருந்திய அமைப்பு. இதில் கடவுள் தன்மை இருப்பதாக நம்மவர் நம்பி வருவதை வரலாற்று மாணவன் ஒருவன் நோக்கின், அது அவனுக்கு நகைப்பை உண்டாக

றும். சமக்கிருதத்தில் தெய்வத்தன்மை உண்டு என நினைக்கின்ற தமிழ் மக்கள் எல்லோரும் இவ்வுண்மையை அறிவார்களானால், அவர்கள் தமது மூடத்தனத்தை நினைந்து நாணுவார்கள் அல்லவா?

வரலாற்றுக் கல்வியினால் இதுவும் இதுபோன்ற பல மூடக்கொள்கைகளும் ஒழியும். வரலாறே மக்களுக்குக் கண். இந்நூல் நாம் எல்லோரும் முதலில் அறிந்துகொள்ள வேண்டிய நம்முன்னோரின் ஆதிவரலாற்றைத் தெரிவிப்பதாகும். இவ் வாராய்ச்சிக்கு ஆதாரம் மேல்நாட்டறிஞரின் ஆராய்ச்சி நூல்களே.

சென்னை
12—4—46.

ந. சி. கந்தையா.

---

இனி வெளி வரும்

**இவ்வாசிரியர் எழுதிய நூல்கள்**

1. பழந்தமிழ்
2. பாம்பு வணக்கம்
3. ஞாயிற்று வணக்கம்

# பொருளடக்கம்

பக்கம்


தோற்றுவாய் .... 7

ஆதி மக்கள் .... 9

மக்கள் ஓரிடத்தினின்றும் பிற இடங்களுக்கு ஏன் சென்றார்கள் .... 11

நாவலந்தீவின் அழிவு .... 12

நாவலந்தீவில நாகரிகம் வளர்ச்சியுற்றிருந்த தென்பதற்குச சான்று .... 14

குமரி நாடு ... 15

குமரி நாட்டின் அழிவும், அங்கு வாழ்ந்த மக்கள் தென்னிந்தியாவிற் குடியேறு தலும .... 16

நாவலந்தீவு .... 17

நாவலந்தீவினின்றும் சென்று மக்கள் பிற நாடுகளிற் குடியேறுதல் .... 18

சிந்துவெளி மக்கள் .... 18

எகிப்தியர் .... 21

சுமேரியர் .... 23

பபிலோனியர் .... 24

அசிரியா .... 25

யூதர் .... 25

பினிசியர் .... 26

சீரியா .... 27

சின்ன ஆசிய மக்கள் .... 28

பக்கம்
எற்றுஸ்கானியா ... 28
கிரேத்தா மக்கள் ... 29
பாஸ்க்கு மக்கள் .... 29
நூபிதியா ... 30
அமெரிக்கர் ... 30
இக்கருத்துக்கள் புதியனவல்ல .... 31
ஆரியர் .... 32
ஆரியருக்கும் தமிழருக்கும் இடையிற்போர் 33
ஆரியர் தமிழரின் கொள்கைகளைப்
பின்பற்றுதல் .... 33
மக்கட் குலங்கள் .... 34
ஹேரஸ் பாதிரியார் இந்திய வரலாற்றை
இதழில் எழுதியிருப்பதன் சுருக்கம் .... 34
பார்ப்பனர் யார்? .... 37
வடமொழி தென்மொழிக் கலப்பு .... 42
பெரிய வெள்ளப் பெருக்குக்குப் பிற்பட்ட
மக்கள் அல்லது ஹோமத்திய இந்திய
மத்தியதரை மக்கட்குலம் .... 45
மொகஞ்சதரோ நாகரிகமும் கீழ்நாட்டு
ஆராய்ச்சியாளரும் .... 47

# தமிழர் யார்?



## தோற்றுவாய்

தமிழர் யார்? அவர்களின் பிறப்பிடம் யாது? அவர்கள் இந்திய நாட்டில் தொன்றுதொட்டு வாழ்ந்து வருகின்றார்களா? அல்லது பிற நாடுகளினின்றும் வந்து புதிதாகக் குடியேறினார்களா? அவர்களின் பழமை எவ்வகையினது? அவர்களின் நாகரிகம் அவர்களிடையே தோன்றி வளர்ச்சியடைந்ததா? அன்றேல் அதனைப் பிறர் அவர்களுக்கு உதவினார்களா? என்பன போன்ற கேள்விகளுக்கு இறுக்கப்படும் விடைகளே தமிழரின் பண்டை வரலாறாக அமையும். முதலில் தன் நாட்டினையும் தன் இனத்தினையும் பற்றிய உண்மை வரலாறுகளை அறிந்துகொள்ளாது பயிலப்படும் வரலாற்றுக் கல்வி பயனற்றதாகும். வரலாற்றுக் கல்வியே மக்களின் பகுத்தறிவுக் கண்ணைத் திறக்க வல்லது.

தமிழரையும், தமிழையும் பற்றிய பழைய வரலாற்று உண்மைகள் வெளிவராமைக்குப் பல தடைகள் இருந்தன. அவைகளுள் ஒன்று, 'தமிழ் வடமொழிக்குப் பிற்பட்டது: தமிழ் வடமொழியைப் பார்த்து அமைக்கப்பட்டது: தமிழர் நாகரிகம் ஆரியரால் தமிழருக்கு உதவப்பட்டது' என்பனபோன்ற தவறான பல கொள்கைகள் ஒரு சாரார் கருத்தில் நன்கு பதிந்திருந்தமையேயாகும். *

---

* It is admitted both by Indian and European scholars that the civilization of the Tamil Nation was, in the main, due to the Aryan Colonists in the South-Tamil studies P 233—M Srinivasa Iyangar, M A. (1914)

இது பழைய ஆராய்ச்சி. இக்கருத்துடையவர்களே பெரும்பாலும் தமிழர் வரலாற்றினை எழுத முயன்று வந்தார்கள்.

"When the Aryans entered India they had no script of their own, and their script was the script of their enemies, the Dasus (Dravidians)" Fr Heras

இத் தவறான கொள்கைகளை முதன்முதல் தகர்த்தெறிந்தவர் பேரறிஞர். பீ. சுந்தரம் பிள்ளை அவர்களாவர். அப்பெருமகற்கு இத்தமிழுலகு என்றும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டது. அக்காலம் முதல் தமிழரையும், தமிழையும்பற்றிய பழைய வரலாறுகளை ஆராயும் ஆவல் மக்களிடையே கிளர்வதாயிற்று. அதனால் தமிழ் நாட்டைப்பற்றிய பண்டை வரலாறுகள் சிறிது சிறிதாகப் புலர்வனவாயின. சிந்து வெளியில் மறைந்துகிடந்த அரப்பா, மோகஞ்சதரோ என்னும் பழைய இந்திய மக்களின் நகரங்களைப்பற்றிய விரிந்த புதைபொருள் ஆராய்ச்சி 1931-ல் சேர்ஜான் மார்சல் என்பவரால் வெளியிடப்பட்டபோது, ஆராய்ச்சியால் முடிவு காணப் பெறாது ஐயத்துக்கு இடமாயிருந்த தமிழ் மக்களின்

---

From prehistoric times these Dravids have been the most intellectual, civilized culturod people of India, famed for arts and architecture, piety and religions with elaborate rites and symbolism. The last they have left to us in magnificent neolithic cave temples, carved out of rocky mountains, and in the most intractable stone beautiful design, elaborate in rich decoration with grandeur and yet delicacy. The artists are quite unsurpassed by any race in the world. The people are deep thinkers powerful rulers and administrators who never permitted any Aryan interference in Central or Southern India, in its government, religion or occupations, though their upper classes affected a good deal of Sanskrit—A short study in the science of comparative religions P 175—J G R Forlong

These last (Early Vedic Hymns) are full of faded decayed and quite unintelligible words, and forms, and in some points nearer Greek then ordinary Sanskrit-(Maxmuller), so that the Aryan tongue first appeared in India, was not intelligibly put into words of forms. This was a work of several centuries later when civilized Dravidian Pandits wrote out for Aryans in their sacred Devanagari or Dravid character. Necessarily they taught the illiterate colonists how to write their language and reform their faith and mythology. The same process was then going on in the west when Greeks were beginning to write their Aryan tongue the Semito Phoenician characters aided by Egyptians and Syrians they too were organizing an Aryan mythology and faith—Ibeid P. 247

இது நிரீக்ஷணையோடு செய்யப்பட்ட மேற்றிசை அறிஞரின் ஆராய்ச்சிக் கருத்து.

பண்டை வரலாறுகள் முடிவு காணப்பெற்று, வெளிச்சம் எய்தின. இன்று தமிழரின் பண்டை வரலாறு இருளில் இருக்கவில்லை. ஆராய்ச்சியில் இவ்வுலக மக்களின் நாகரிகத்துக்கு அடிகோலியவர்கள் தமிழர்களே என்பது தெளிவாகின்றது. ஆராய்ச்சியாற் கிடைத்த முடிவுகளை இந் நூல் நன்கு எடுத்து விளக்குகின்றது.

## ஆதி மக்கள்

தமிழ் மக்களின் ஆதி வரலாற்றை அறிந்துகொள்வதற்கு, ஆதிமக்களைப் பற்றிய வரலாற்று அறிவு இன்றியமையாதது. இன்றைய பூகோள படத்தில் தெற்கே அதிக கடலும், வடக்கே அதிக நிலமும் இருப்பதைக் காண்கின்றோம். மிக மிக முற்காலத்தில் பூகோள படம் இதற்கு நேர்மாறாக விருந்தது. ஒருகாலம் தெற்கே கிடந்து நீருள் மறைந்துபோன பெருநிலப் பரப்பைப் பற்றி நிலநூலாரும், புராணக் கதைகளும், கன்ன பரம்பரை வரலாறுகளும் கூறுகின்றன. தெற்கே கிடந்து மறைந்துபோன நிலப்பரப்பை மேல்நாட்டுப் பௌதிக நூலார், லெமூரியா என அழைப்பர்.

அங்குத், தேவாங்கு போன்ற மக்கள் வாழ்ந்தார்கள் எனும் கருத்துப் பற்றி லெமூரியா என்னும் பெயர் இடப்பட்டது. லெமூர் என்னும் பெயர் தேவாங்கைக் குறிக்கும். லெமூரியா என்னும் நிலப்பரப்பிலேயே ஆதி மக்கள் தோன்றிப் பெருகினார்கள் என ஹெக்கல் என்னும் ஆசிரியர் கூறியுள்ளார். இக்கருத்துச் சிலகாலம் சிற்சிலரால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. ஆனால் இற்றை ஞான்றை ஆராய்ச்சிகளால், இக்கொள்கை வலியுறுகின்றது. எச். ஜி. வெல்ஸ் என்னும் இக்காலப் பேரறிஞரும் மத்தியதரைக்கும் தென் சீனத்துக்கும் இடையிலுள்ள நிலப்பரப்பிற் றோன்றிப் பெருகிய மக்களே பல சாதியார்களாக மாறியுள்ளார்கள் எனத் தமது உலக வரலாற்றுக் காட்சிகள் (Outlines of History) என்னும் நூலகத்தே

குறிப்பிடுவாராயினர். லெமூரியாக் கண்டம் உயிர்கள் தோன்றிய காலத்திலேயே மறைந்துபோயிற்று எனச் சில ஆசிரியர்கள் கொண்ட கருத்து இன்று ஏற்றுக் கொள்ளப்படவில்லை.

இன்று வடமொழியில் எழுதப்பட்டிருக்கும் பல கற்பனைக் கதைகளோடு பின்னிக்கிடக்கும் பழங்கதைகளின் தொகுதிகள் புராணங்கள் எனப்படுகின்றன. வடமொழியாளர் இந்திய நாட்டை அடைந்தபோது, இந்திய நாட்டில் வழங்கிய பழங்கதைகளை எழுதிவைத்தல் இயல்பேயாகும். மெகஸ்தீனஸ் என்னும் கிரேக்கரும், மார்க்கோப் போலோ என்னும் இத்தாலியனும், சீனயாத்திரிகர்களும் இந்திய நாட்டு வரலாறுகள் சிலவற்றை எழுதிவைத்தமையை இதனோடு ஒப்பிடலாகும். இந்திய மக்களின் பழங்கதைகளாகிய புராணங்கள், தெற்கே பெரிய நிலப்பரப்பிருந்ததென்றும், மேரு, பூமிக்கு மத்தியிலுள்ளதென்றும், மேருமலையின் ஒரு கொடுமுடி இலங்கைத் தீவு என்றும் கூறுகின்றன. தமிழ் நூல்களும், தெற்கே கிடந்து அழிந்துபோன நிலப்பரப்பைப்பற்றிக் கூறுகின்றன இவை மேல்நாட்டு ஆராய்ச்சியாளர் கூற்றுக்களோடு மிக ஒத்திருக்கின்றன. தெற்கே கிடந்து மறைந்துபோன நிலப்பரப்பைத் தமிழ்மக்கள் நாவலந்தீவு எனப் பெயர் இட்டு வழங்கினர்.

பூமியின் நடுவரையை அடுத்த நாடுகளிலே, ஆதியில் மக்கள் தோன்றிப் பெருகினார்கள் என விஞ்ஞானிகள் கருதலானார்கள். மிகப் பழைய மனித எலும்பு சாவகத் தீவிற் கிடைத்தது இது விஞ்ஞானிகள் கொண்டிருந்த கருத்துக்கு மிக இயைபுடையதாகக் காணப்பட்டது. இதனாலும் பிறகாரணங்களாலும் சாவகத் தீவிலோ, அதனை அடுத்திருந்த நிலப்பரப்பிலோ, ஆதிமக்கள் தோன்றிப் பெருகியிருத்தல் வேண்டுமென விஞ்ஞானிகள் பலர் கூறுகின்றனர்.

# மக்கள் ஓரிடத்தினின்றும் பல இடங்களுக்கு ஏன் சென்றார்கள்?

தொடக்கத்தில் மக்கள் விலங்குகளை ஒப்ப வாழ்ந்தார்கள். அவர்கள் காடுகளிற் கிடைக்கும் காய் கனி கிழங்குகளை உண்டு சுனைநீரைப் பருகி மலைக்குகைகளிலும், மரநிழல்களிலும் தங்கிவாழ்ந்தனர். அவர்கள், பொருள் பண்டங்கள் எவையும இல்லாதவர்களாய் எங்கும் அலைந்து திரிவாராயினர். இந்நிலைமையில் மக்கட்பெருக்கம் உண்டாயிற்று. அதனால் எல்லாருக்கும் ஓரிடத்தில் உணவு கிடைத்தல் அரிதாயிற்று. ஆகவே உணவின் பொருட்டுப் பலர் தமது நடு இடத்தை விட்டு, உணவு தேடும் பொருட்டுச் சிறிது சிறிதாக அகலச் சென்றனர். இவ்வாறு சென்ற மக்களுக்குத் தாம் முன்னிருந்த இடங்களுக்குத் திரும்பிவரும் கட்டாயம் உண்டாகவில்லை. இவ்வுலகின் பல இடங்களில் † பழங்கற்கால நாகரிகமுடைய மக்கள் வாழ்ந்து வந்ததற்குரிய சான்றுகள் காணப்படுகின்றன. இதனால் பழங் கற்காலத்திலேயே மக்கள் பிரிந்து உலகின் பல பாகங்களுக்குச் சென்று தங்கிவிட்டார்கள் எனத் தெரிகின்றது. பழங் கற்கால ஆயுதங்களோடு கண்டு எடுக்கப்பட்ட மனித மண்டை ஓடுகள் எல்லாம் ஒரே வகையாகக் காணப்படுகின்றமையின், அக்காலத்தில் இன்று காணப்படுவனபோன்று நிறத்தாலும் உடற்கூறுகளாலும் மாறுபட்ட மக்கட்குலங்கள் தோன்றவில்லை எனக் கருதப்படுகின்றது. ‡ புதிய கற்கால கல்லாயுதங்களுடன் காணப்பட்ட மனித மண்டை ஓடுகள் வெவ்வேறு வகையாக இருத்தலின் அக்காலத்திலே மக்கட் குலங்கள் தோன்றியிருந்தனவாதல் வேண்

† பழங்கற் காலம் : மக்கள் முரடான கல்லாயுதங்களைச் செய்து பயன்படுத்திய காலம்.

‡ புதிய கற்காலம் : மக்கள் அழுத்தமான கல்லாயுதங்களைச் செய்து பயன்படுத்திய காலம்.

டம். ஒரு மக்கட்குலத்தினர் நிறம், உடற்கூறு முதலிய வைகளால் மாறுபட்ட இன்னொரு மக்கட் குலத்தினராக மாறுபடுவதற்கு 300 தலைமுறைகள் வரையில் ஆகுமென் பது ஆராய்ச்சியாளர் கருத்து.

## நாவலந்தீவின் அழிவு

பூமியின் நடுக்கோட்டை அடுத்த நாடுகளில், பெரிய காற்றுக் குழப்பங்களும், எரிமலைக் குழப்பங்களும் தோன்றுதல் இயல்பு. எரிமலைக் குழப்பங்களால் தரைப் பாகங்கள் கடலுள் மறைந்துபோதலும் கடலுள் தரைகள் எழுதலும் இயல்பு. ஒரு காலத்தில் பெரிய எரிமலைக் குழப்பத்தினால் நாவலந்தீவு சின்னபின்னமாக்கப் பட்டது. இந்துமாக்கடல், பசிபிக் கடல்களின் இடையிடையே தீவுக்கூட்டங்களாக விளங்குவன நாவலந்தீவின் பகுதிகளே. அவை, நாவலந்தீவிலிருந்த பெரிய மலைகளின் சிகரங்கள் ஆகலாம். நாவலந்தீவு சிதறுண்டபோது அங்கு வாழ்ந்த மக்களில் எண்ணில்லாதோர் மாண்டனர். பலர் ஒருவாறு தப்பிப்பிழைத்தனர். உலக மக்கள் எல்லோரிடையும் பெரிய கடல்கோள் ஒன்றைப்பற்றிய பழங்கதை வழங்குகின்றது. ஒவ்வொரு மக்களிடையும் வழங்கும் அப்பழங்கதைகள் எல்லாம், சிற்சில மாறுதல்களைவிட ஒரேவகையாகக் காணப்படுகின்றன. அவ்வரலாறு மக்கள் எல்லோரும் ஒரு மத்திய இடத்தில் வாழ்ந்துகொண்டிருந்த காலத்தில் நேர்ந்த பெரிய வெள்ளப் பெருக்கு ஒன்றின் ஞாபகமே என்று நன்கு அறியக் கிடக்கின்றது. பெரிய வெள்ளப் பெருக்குக்குத் தப்பிப் பிழைத்த சத்தியவிரதன் என்னும் தமிழ் மனுவிலிருந்து உலகமக்கள் தோன்றிப் பெருகினார்கள் எனப் புராணங்கள் நவில்கின்றன. கிறித்துவ வேதத்தில் அப்பெரிய வெள்ளப் பெருக்கைப்பற்றிய வரலாறு கூறப்படுகின்றது. அவ்வரலாறு யூதமக்களுக்குச் சாலடிய மக்கள் வாயி

லாகக் கிடைத்தது. சால்டியர் சோழ நாட்டினின்றும் சென்று, மேற்கு ஆசியாவிற் குடியேறிய மக்களாவர் *

---

* மேற்கு ஆசிய மக்களும் தமிழ் மக்களும் ஒரே மக்கட் குலத்தைச் சேர்ந்தவர்களாகக் காணப்பட்டமையாலும், இருமக்களின் பண்டை நாகரிகமும் பெரிதும் ஒத்திருந்தமையாலும், மேற்கு ஆசிய மக்களே இந்திய நாட்டை அடைந்தவர்களாவர் என ஆராய்ச்சியாளர் கருதுவாராயினர். இன்றைய ஆராய்ச்சியில் மேற்கு ஆசிய மக்களே இந்திய நாட்டினின்றும் மேற்கு ஆசிய நாடுகளிற் சென்று குடியேறியவர்களாவர் எனத் தெளிவுறுகின்றது. சோழநாட்டினின்றும் சென்று டைகிரஸ், யூப்ரடீஸ் ஆற்றின் வடபால் குடியேறிய மக்கள் தம் நாட்டுக்குச் சால்டியா எனப் பெயரிட்டார்கள் என்றும், அப்பெயர் சோழதேசம் என்பதன் திரிபாகும் என்றும் எ. சி. தாஸ் என்பார் தமது இருக்குவேத இந்தியா என்னும் நூலில் நன்கு விளக்கியுள்ளார்.

'சிந்துப் பிரதேசத்திலிருந்து நமது நாகரிகம் பாபிலோனியா எகிப்து முதலிய தேசங்களுக்குப் பரவியது. அவ்விடங்களிலிருந்து இந்தியாவிற்குப் பரவியது என்ற ஐரோப்பிய ஆராய்ச்சியாளரின் எண்ணம் தவறென்றே கருதவேண்டும். பாபிலோனியாவில் கி மு. 700ல் ஒரு தமிழ்க் குடித்தனம் இருந்தது. தென்னாட்டிலிருந்து தமிழ் நாகரிகம் உரோமாபுரிக்கும் கிரேக்க நாட்டிற்கும் பரவியது. இன்னும் தக்கிண பீடபூமியைச் சேர்ந்த வேட்டுவர் என்ற குறிஞ்சி நிலமக்கள் யவன தேசத்திற்குச் சென்று தங்கள் அரசை நிலைநிறுத்தித் தங்கள் பெயரையும் அந்நாட்டிற்குக் கொடுத்தார்கள். இதுவே கிரீட் (Crete) தேசம். இதன் நாகரிகத்திற்கும் தமிழ் நாகரிகத்திற்கும் ஒப்புமை மிகுதியாயுள்ளது. **மணிமலர்த்திரட்டு—திரு வி. ஆர் இராமசந்திர தீட்சிதர் M. A.—வரலாற்று ஆராய்ச்சியாளர் பல்கலைக் கழகம் சென்னை.**

The Development of Mohenjo-Daro script, the religion of these two countries and that of Egypt the titles of kings, the number of zodiacal constellations among the Proto-Indian people and the relative position of these constellations, the changing of the Proto—Indian constellation of the Harp (yal) for Turus (the bull) which Might have taken place in Sumar the tradition of the ancient people of Mesopotamia recorded by Berosus, the parallel by Bible account of Gen 11-1-5

# நாவலந்தீவில் நாகரிகம் வளர்ச்சியுற்றிருந்த தென்பதற்குச் சான்று

சிந்துநதிப் பள்ளத்தாக்குகளில் மொகஞ்சதரோ அரப்பா என்னும் பழந் தமிழரின் இரு புராதன நகரங்கள் அண்மையிற் கண்டு பிடிக்கப்பட்டன அவைகளின் காலம் இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகள் வரையில் அங்குக் காணப்பட்ட முத்திரைகளில் அக்கால மக்கள் வழங்கிய எழுத்துக்கள் பொறிக்கப்பட் டிருக்கின்றன இவ்வகை எழுத்துக்கள் தென்னிந்தியாவின் சில பகுதிகளிற் கிடைத்த வரலாற்றுக்காலத்திற்கு முற்பட்ட மட்டாண்டங்களிலும் இலங்கையில் கேகாலைப் பகுதியிலுள்ள மலை ஒன்றிலும் காணப்படுகின்றன. கிழக்குத் தீவுகளிலும் பசிபிக்கடற் றீவுகளிலும் இவ்வகை எழுத்துக்களே வழங்கின என்பது அவ்விடங்களிற் கிடைத்த எழுத்துப் பொறித்த பழம் பொருள்களால் நன்கு அறியப் படுகின்றது. மக்களிடையே நாகரிகம் முதிர்ந்து, மொழி உண்டாகி அது பேச்சு வழக்கில் நீண்டகாலம் நிலவிய பின்பே எழுத்துக்கள் தோன்றுவது இயல்பு. நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்திய நாட்டை அடைந்த ஆரியர் எழுத்தெழுத அறிந்திருக்க வில்லை. ஆனால் நாவலந்தீவு மக்கள் எழுத்தெழுத அறிந்திருந்தனர். நாவலந்தீவு மக்கள் பெரிய உலக அழிவிற்குமுன்பே நாகரிக முதிர்ச்சியுடையவர்களாய் இருந்தார்கள் என்பதற்கு அவர்கள் வழங்கிய எழுத்

---

All point to the same conclusion, *that the* migration of the Mediterranean race commenced from India and extended through south Mesapotamia and North-Africa spread through Crete Cyprus, Greece, Italy and Spain and across the Prynees reached central Europe and the British Isles The route starting from Ceylon to Ireland is marked by uninterupted chain of dolmen and other megaliths that seem to be the relics of the enterprising and highly civilized race which is termed the Mediterranean by the anthropologists and which in India has been quite unreasonably despised under the name Dravidian—Fr Heras

ஆச்சுகளே சான்றாகின்றன மொகஞ்சதரோவிற் கிடைத்த ஆயிரத்து எண்ணூறு முத்திரைகளிற் பொறிக்கப்பட்ட முத்திரைகளை ஹெரஸ் பாதிரியார் நன்கு ஆராய்ந்துள்ளார் அவ்வெழுத்துக்கள் சிலவற்றை அவர் வாசித்திருக்கின்றார் மொகஞ்சதரோவில் வழங்கியமொழி, தமிழ் என உறுதிப்படுத்தப்பட்டுள்ளது. இதனால் நாவலந்தீவில் வழங்கிய மொழியும் தமிழேயென உறுதிப்படுகின்றது.

## குமரி நாடு

நாவலந்தீவின் வடக்கில் அராவலி மலைகள் வரையும் கடலிருந்தது. நாவலந்தீவு அழிவுற்ற காலத்தில் இந்தியக்குடா நாட்டைத் தொடர்ந்து தெற்கே பெரிய நிலப்பரப்பிருந்தது. அது கன்னியாகுமரிக்குத் தெற்கே எவ்வளவு தூரம் நீண்டிருந்ததென்று வரையறுத்துக்கூற இயலாது. பழைய தமிழ் நூல்களிற் கூறப்படுவதை நோக்குமிடத்து அந்நிலப்பரப்பு பெரிய நீளமும் அகலமும் உடையதாய் இருந்ததெனமாத்திரம் கூறலாம். குமரி நாடு என்பது குமரித்தெய்வத்தின் வழிபாடு காரணமாகத் தோன்றிய பெயர். பண்டைநாளில் ஆளும் அரசர் அல்லது வழிபடும் கடவுளர்களின் பெயர்கள் தொடர்பாகவே, பெரும்பாலும் நாடுகளுக்குப் பெயர்கள் உண்டாயின இவ்வுலகில் ஆதியில் தோன்றியது பெண் ஆட்சி. அக்காலத்தில் ஆடவர் மகளிருக்குக் கீழ்ப்பட்டிருந்தார்கள். சொத்துரிமை பெண்களுக்கே இருந்தது. தாயம் என்னும் சொல்லுக்குச் சொத்துத் தாயிடமிருந்து பிள்ளைகளைச் சேருவது என்று பொருள் இவ்வழக்கைப் பின்பற்றியே "சீதன" வழக்கும் உண்டாயிற்று ஆடவன் மனைவிக்குக் கீழ்ப்படிந்து நடப்பதற்காகவே இவ்வழக்கம் எழுந்தது. தாயாட்சி உண்டாயிருந்த காலத்தில், மக்கள் தாய்க் கடவுளையே வழிபட்டார்கள். ஒரு காலத்தில் திருமணக் கட்டுப்பாடுகள் இருக்கவில்லை ஆகவே தாய், திருமணம் பெறாதவள் அல்லது குமரி

எனப்பட்டான். குமரிச்சடையான் வணக்கத்திற்குரிய நாட்டா தலின் அது குமரிநாடு என வழங்கிற்று.

குமரி நாட்டில் நாற்பத்தொன்பது பிரிவுகள் இருந் தனவென்பது சிலப்பதிகாரத்திற்கு, அடியார்க்குநல்லார் எழுதிய உரையிற் காணப்படுகின்றது. அங்குக், குமரி, பஃறுளி என்னும் ஆறுகளும், குமரி என்னும் மலையும் இருந்தனவென இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்திற் கூறி யுள்ளார். செங்கோன்தரைச் செலவு, என்னும் நூலால் அங்கிருந்த மணிமலை, பேராறு என்னும் சில மலைகள், இடங்களின் பெயர்களும் அறியவருகின்றன. செங் கோன்தரைச் செலவு என்பது குமரிநாட்டின் கண் இருந்த பெருவள நாட்டரசனாகிய செங்கோன்மீது பாடப் பட்ட தமிழ் நூல். அதன் சில பாடல்களே வெளிவந் துள்ளன. செங்கோன்தரைச் செலவு மிகப் பழைய நூல் எனச் சிலர் கருதுகின்றனர். மொகஞ்சதரோ என்னுமிடத்தில் வழங்கிய தமிழின் போக்கை நோக்கு மிடத்து, அது மொகஞ்சதரோ காலத்துக்குப் பல நூற்றாண்டுகள் பிற்பட்ட நூல் என்பது நன்கு புலப் படும். செங்கோன்தரைச் செலவு என்னும் நூல், உரை யாசிரியர்களால் எடுத்தாளப்படாமையின் அது பிற்கால த்தவர் எவரோ கட்டிய போலிநூல் எனச் சிலர் கூறுவர். உரையாசிரியர்கள் ஆட்சிக்குத் தப்பிய பல நூற்பெயர்கள் யாப்பருங்கல விருத்தியுரையிற் காணப்படுகின்றன.

## குமரிநாட்டின் அழிவும், அங்கு வாழ்ந்த மக்கள் தென்னிந்தியாவிற் குடியேறுதலும்

குமரி நாடும் சிறிது சிறிதாகக் கடல் கோளுக்குட் பட்டது. இக்கடல் கோளுக்குப் பிழைத்த மக்கள் வடக்கு நோக்கிச் சென்று தென்னிந்தியாவிற் குடியேறி னார்கள். அம்மக்கள் கன்னித் தெய்வத்தின் திருவுருவைத் தெற்கின் கண் வைத்து வழிபடுவாராயினர். நாம் இப் பொழுது குடியேறியிருக்கும் நாட்டை மேலும் கடல்

கொள்ளாதிருத்தற் பொருட்டு அத்தெய்வததின் திரு வுருவை அவர்கள் அங்கு வைத்தார்கள் ஆகலாம். இந்தி யாவுக்கு வந்து மீண்டு சென்ற உரோமா கன்னித் தெய் வத்தின் திருவுருவம் அங்கு இருந்தமையை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் குறிபபிட்டிருக்கின்றார்கள்.

## நாவலந்தீவு

குமரிநாட்டினின்றும் வந்து குடியேறிய மக்கள், தமது நாட்டுக்குக் கடல்வாய்பபட்டு மறைந்த நாவலந் தீவின் பெயரையே இட்டார்கள். அதனிடை இயற்கைக் குழப்பங்கள் யாதும் நிகழவில்லை. மக்கள் அமைதி யடைநதிருந்தனர்; தாம் முன்பு அறிந்திருந்த பல்வகைத் தொழில்களைப் புரிந்தனர்; வேளாண்மை வாணிகம் என்பன தலையெடுத்தன. நாடு நகரங்கள் உண்டாயின. அவர்கள், தம்முள் அறிவும் ஆற்றலும் வீரமுஞ் செறிந்த ஒருவனை அரசனாகத் தெரிந்தெடுத்தார்கள். அவன் வாழ்ந்த நகரம் தென்பாகத்தில் இருந்தது. மக்கள் பெருகி மேலும் வடக்கே சென்று குடியேறினர். வடகலே பெருந்தொலைவில மக்கள் நுழைநது செல்ல முடியாமல் 'தண்டகம்' என்னும் நெருங்கிய காடு தடுத்தது. முன்னை யிலும் இப்பொழுது மக்கள் அகன்ற இடத்திற் குடியேறி வாழ்ந்தார்கள். அப்பகுதிகளை ஆள்வதற்கு இன்னும் இரண்டு அரசர் தெரிந்தெடுக்கப்படுவாராயினர். இவ் வாறு நாவலந்தீவில் மூவர் ஆட்சி உண்டாயிற்று. தெற்கே உள்ள நாடு, பழைய அரசனுக்கு உரியதாதலின், அது பண்டு நாடு எனப்பட்டது. பழமையை உணர்த்தும் பண்டு என்னும் சொல்லினின்றே பாண்டியன் என்னும சொல் உண்டாயிற்று. மாபாரதத்திற் சொல்லப்படும் பாண்டு என்பவனின் பெயரிலிருநது பாண்டியன் என் னுஞ் சொல் உண்டாயிற்று எனச் சிலர் கூறுவர். அது பெரிதும் தவறுடைத்து; பாண்டுவுக்கு முன் பாண்டியர் இருநதனர். மேற்குக் கடற்கரை, கிழக்குக் கடற்கரை நாடுகளை ஆண்ட அரசர் முறையே சேரர், சோழர் எனப்

பட்டார்கள். இவ்வாறு நாவலந்தீவில் மக்கள் பெருகப் பெருகப் பல அரசாட்சிகள் உண்டாயின.

## நாவலந் தீவினின்றும் சென்று மக்கள் பிறநாடுகளிற் குடியேறுதல்

நாவலந்தீவில் மக்கள் பெருகத் தொடங்கினார்கள். ஒரு நாட்டில் மக்கள் அதிகம் பெருகினால் அங்கு வாழ்க்கைக்கு இசைவுகள் குறைவுபடும். ஆகவே மக்கள் இசைவுடன் வாழக்கூடிய பிறநாடுகளிற் சென்று குடியேறுவார்கள். தென் தமிழ் நாட்டில் வாழ்ந்த மக்கள் பற்பல கூட்டத்தினராய்க் குடியேற்ற நாடுகளைத் தேடி வெளியே சென்றனர். வடக்கே விந்தியமலை வரையிற் பெருங்காடு இருந்தமையால் அவர்கள் தரை வழியே வடக்கு நோக்கிச் செல்ல முடியவில்லை. தமிழர் திறமையுடைய மாலுமிகளாயிருந்தனர். ஆகவே அவர்கள் கடல் வழியே ஏகினர்.

## சிந்து வெளி மக்கள்

இவ்வாறு சென்ற ஒரு கூட்டத்தினர் வடக்கே [illegible] நதி முகத்துவாரத்தை அடைந்தனர். இந்நதி ஓரங்கள் மக்கள் குடியேறி வாழ்தற்கேற்றனவாய் இருந்தன. அக்கூட்டத்தினர் அவ்வாற்றோரங்களில் தங்கித் தானியங்களை விளைவித்து இனிது வாழ்ந்தனர். மக்கள் பெருகப் பெருக அவர்கள் அவ்வாற்றோரங்களில் குடியேறிப் பரவினார்கள். அக்கால மக்கள் வியக்கத் தகுந்த நனி நாகரீகம் எய்தியிருந்தனர். அவர்களைப் பற்றி 1921-ம் ஆண்டு வரையில் யாதும் தெரியவில்லை. அவர்கள் அமைத்து வாழ்ந்த இரு பெரிய நகரங்கள் பழம்பொருள் ஆராய்ச்சியாளரால் கண்டு பிடிக்கப்பட்டன. பிற்காலத்தைய மக்கள், அவைகளுக்கு மொகஞ்சொதரோ, அரப்பா எனப்பெயரிட்டு வழங்கினார்

கள் இவ்விரு நகரங்களுக்கும் இடையிலுள்ள தூரம் நானூறு மைல். ஆனால் இவ்விரு நாடுகளிலும் காணப் பட்ட நாகரிகக் குறிகள் ஒரே வகையின. அதனால் அக் காலச் சிந்துவெளி மக்களின் நாகரிகம் மிகப் பரவியிருந்த தென விளங்குகின்றது.

அவர்களின் நாகரிகம ஆறாயிரம ஆண்டுகளுக்கு முற் பட்டது அக்காலத்தில் அவர்கள் இரும்பைப்பற்றி அறிந்திருக்கவில்லை. அவர்களின் நாகரிகம் கற்கால முடிவுக்கும் உலோக காலத் தொடக்கத்துக்கும் இடைப் பட்டது. இற்றைநாள் தமிழரினும் பார்க்கச் சிந்து வெளித் தமிழர் நாகரிகத்திற் குறைந்தவர்களல்லர். முற் கால மக்கள் நாகரிகத்தாலும் அறிவாலும் தாழ்ந்தவர் களாயிருந்தார்களென்றும் காலஞ் செல்லச் செல்ல அவர்களின் நாகரிகமும், அறிவும வளர்ச்சியடைந்தன வென்றும் சிலர் கருதுகின்றனர். சில வகைகளில் அல் லாமல், பலவகைகளில் முன்னைய மக்களே அறிவாற்ற லும் மனவலியும் உடல் வலியும் பெற்றிருந்தார்கள் எனப் பழைய வரலாறுகளை நோக்குங்கால் தெளிவாக விளங் கும். நாகரிகம் முன் நோக்கிச் செல்வது போலவே, ஓர் ஒரு கால் பின் நோக்கியும் செல்வதாக அறிஞர் ஆராய்ந்து கூறியுள்ளார்கள். ஆறாயிரம ஆண்டுகளின் முன் எகிப்தியர் கட்டி எழுப்பிய கூர்நுதிக் கோபுரங்களை யும், சிரிய நாட்டினர் அறுபது அல்லது எழுபது அடி உயரமுள்ள தனிக் கற்றூண்களை நிறுத்திக் கட்டி எழுப் பிய "பாலபெக்" ஆலயத்தையும கண்டு இன்றைய உலகம் வியப்படைகின்றது. ஆகவே காலப் போக்கிற் பின் நோக்கிச் செல்லச் செல்ல, மக்கள் அறியாமையுடை யவர்களாயிருந்தார்கள் என வரலாற்று நூலார் சிலர் கருதுதல் தவறுமென்க. அறிவும, அறியாமையும், நாக ரிகமும், அநாகரிகமும் எல்லாக் காலங்களிலும் உண்டு என்பது அறியப்படுதல் வேண்டும்.

சிந்து வெளியிலே கண்டுபிடிக்கப்பட்ட பழைய நக ரங்கள் உயர்ந்த நகர அமைப்பு முறையையும், சுகவாழ்க் கைக் கேற்ற விதிகளையும் தழுவி அமைக்கப்பட்டுள்ளன. அந்நகர்களின் இடையிடையே அகன்ற நெடிய வீதிகள் செல்கின்றன. அவைகளைச் சிறிய பல வீதிகள் குறுக்கே கடந்து செல்கின்றன. வீதிகளின் இரு மருங்குகளிலும் வீடுகள் நிரையாகக் கட்டப்பட்டிருக்கின்றன. அவை களுக்கு ஒன்று முதல் மூன்று மாடிகள் வரையில் உண்டு. களிமண்ணினால் கல அறுத்துக் காயவிட்டுச் சூளைவைக்கப் பட்ட செங்கற்கள் வீடுகள் கட்டுவதற்குப் பயன்படுத்தப் பட்டன. வீடுகளுக்கு உள முற்றமும், உள் முற்றத்திற் கிணறும் இருந்தன. உள் முற்றத்தில் முளைகள் அடித்து ஆடுமாடுகள் கட்டப்பட்டன. வீடுகளுக்குக் குளிக்கும் அறை இணைக்கப்பட்டிருந்தது. கழிவுநீர் செங்கற்பதித்த வாய்க்கால் வழியே சென்று வீதியிலுள்ள பெரிய வாய்க்காலில் விழுந்தது. வீதியிலுள்ள பெரிய வாய்க் காலும் செங்கல் பதிக்கப்பட்டிருந்தது. வீடுகளுக்குப் பல சாளரங்கள் இருந்தன. மாடியினின்றும் நீர் கீழே செல் வதற்குச் சூளையிட்ட களிமண் குழாய்கள் பொருத்தி வைக்கப்பட்டன. சமைப்பதற்கும் நித்திரை கொள்வ தற்கும் தனியறைகள் இருந்தன. மக்கள் பல்வகைக் கைத்தொழில்கள புரிவதிற்றிறமையடைந்திருந்தனா. தச் சர், அழகிய கட்டில், நாற்காலி, முக்காலி முதலியவீட்டுப் புழக்கத்துக்குரிய பொருள்களைச் செய்தார்கள். பொற் கொல்லர் மாதர் விரும்பி அணியும் அழகிய அணிகலன் களைப் பொன், வெள்ளி, வெண்கலம் முதலிய உலோகங் களாற் செய்து அளித்தனர். குயவர் அழகிய பானை சட்டிகளைத் தண்டு சக்கரங்களைக்கொண்டு செய்தனர். அவர்கள் அம்மட்பாண்டங்கள் சிலவற்றிற்குப் பலவகை நிறங்கள் திட்டி, அவைமீது பலவகை ஓவியங்களை எழுதி னர். முற்கால மட்பாண்டங்களின் வடிவங்கள் இக்காலம் மேல் நாடுகளிலிருந்து வரும் கண்ணாடிப் பொருள்கள் போன்று அழகுடையனவாயிருக்கின்றன. சிறுவர் பல

வகை விளையாட்டுப் பொருள்களை வைத்து விளையாடினார்கள் அவை ஊதுகுழல், கிலுகிலுப்பை, மண்ணாற்செய்து சூளையிட்ட பறவை, விலங்குகளின் வடிவங்கள் முதலியன.

மகளிர் அழகிய அணிகலன்களை அணிந்து, நெற்றியிற் செங்காவிப்பொட்டு இட்டார்கள். முகத்துக்கு ஒருவகை வெண்பொடி பூசினார்கள். மேனி அலங்கரிப்புக்குரிய பொருள்களை முத்துச்சிப்பியின் ஓடு பதித்துச் செய்யப்பட்ட அழகிய சிமிழ்களில் வைத்திருந்தார்கள். அவர்கள் தமது கூந்தலைப் பலவகையாகக் கோதி முடிந்தனர். அவர்கள பலவகை வேலைப்பாடுடையனவும் கண்கவரும் நிறம் ஊட்டப்பட்டனவுமாகிய அழகிய ஆடைகளை உடுத்தனர்.

கடவுள் வழிபாட்டுக்குரிய கோவில்கள் இருந்தன. கோவில்களுக்கு அருகே உள்ள படிக்கட்டுக்களுடைய கேணிகளில் கால் கைகளைச் சுத்தஞ் செய்த பின், அல்லது நீராடியபின் வழிபடுவோர ஆலயங்களுக்குச் சென்றனர். ஆடவர் முகததை மழித்துக்கொண்டனர். மழிக்கும் கத்திகள் வெண்கலத்தினாற் செய்யப்பட்டன. இவ்வாறு அக்கால மக்கள், உயர்ந்த நாகரிகமும் உல்லாச வாழ்க்கையும் உடையவர்களாய் விளங்கினார்கள். இது இற்றைக்கு ஆறாயிரம் ஆண்டுகளின் முற்பட்ட தமிழரின் நாகரிக நிலை

தமிழ் நாட்டினின்றும் சென்ற இன்னொரு கூட்டத்தினா செங்கடல் வழியாக ஆபிரிக்காவை அடைந்தனர். அங்கு என்றும் வற்றாத நீர்ப்பெருக்குடைய நைல் என்னும ஆறு உண்டு. அதன் பக்கங்களிலுள்ள நிலம் தானியங்களை விளைவிப்பதற்கு ஏறற செழிப்புடையது. அவ்விடததே அவர்கள் தங்கி வாழ்ந்தனா; மக்கள் பெரு

கினர்; நாடு நகரங்கள் உண்டாயின. அவர்களாலமைக்கப்பட்ட பெரிய நகரங்கள் மெம்பிஸ், தீபஸ் என்பன. அம்மக்களின் பழைய நாகரிகக் குறிகள் இன்றும் அவ்விடங்களிற் காணப்படுகின்றன. பழம் பொருள் ஆராய்ச்சியாளர் அவ்விடங்களிற் கிடைத்த பழம் பொருள்களை ஆராய்ந்துள்ளார்கள். எகிப்தியரின் பழங் கதைகள், அவர்கள் பண்டு நாட்டினின்றும் சென்றவர்களாகக் கூறுகின்றன. பண்டுநாடு என்பது பாண்டி நாடே என வரலாற்றாசிரியர்கள் ஆராய்ந்து காட்டியுள்ளார்கள். மக்கட்குல நூலார், தமிழரும் எகிப்தியரும் ஒரே குலமுறையில் வந்தோர் எனக் கூறியிருக்கின்றனர். பழைய எகிப்தியருடைய பழக்கவழக்கங்கள் கடவுள் வழிபாட்டு முறை முதலியன தமிழ் மக்களிடையே காணப்படுவன போன்றன. அவர்கள் ஆலயங்களில் இலிங்கங்களை வைத்து வணங்கினர். நைல் ஆற்றுக்கு மேற்கில் சிவன் என்னும் பாலை நிலப் பசுந்தரை ஒன்று உள்ளது. அங்கு அவர்கள் ஞாயிற்றுக் கடவுளை, சிவனென்னும் பெயரிட்டு வழிபட்டனர்.

எகிப்திய குருமார் பகலில் இருமுறையும், இரவில் இருமுறையும் நீராடினார்கள்; தோய்த்துலர்த்திய ஆடையை உடுத்தார்கள்; காலில் மிதியடி தரித்தார்கள். மக்கள் தாம் பருகும் கிண்ணங்களைத் தினமும் காலையில் சுத்தஞ் செய்தார்கள்; ஆண்டில் ஒருமுறை ஆலயங்களிலும் வீடுகளிலும் தீபங்கள் ஏற்றித் தீபவிழாக்கொண்டாடினார்கள். எகிப்திற் கிடைத்த பழைய மட்பாண்டங்கள் இந்தியாவிற் கிடைத்த அவ்வகைப் பொருள்களை ஒத்துள்ளன. இறந்த அரசரின் உடல்களை அடக்கஞ்செய்தற்கு அவர்கள் கட்டி எழுப்பிய கூர்நுதிக்கோபுரங்கள் இன்றும் உலகவியப்புக்களுள் ஒன்றாக மதிக்கப்படுகின்றன. நீலநதியில் வளரும் நாணற்புல்லை வெட்டிப்பிளந்து ஒட்டிய தாள்களிலே அவர்கள் குச்சியில் மை தொட்டு எழுதினார்கள். அவர்கள் எழுதுவதற்கு ஓவியங்களைப் பயன்படுத்

தினர். தமிழரின் பழைய எழுத்துக்கள் இவ்வகையின என்பது பழைய சான்றுகளால் அறியவருகின்றன.

## சுமேரியர்

தமிழரில் இன்னொரு கூட்டத்தினர் பாரசீகக் குடாக் கடல் வழியே சென்று தைகிரஸ் யூபிராதஸ் ஆறு களின் கீழ் ஓரங்களில் குடியேறினார்கள். அவர்கள் ஆற்றி னின்றும் நீரைக் கால்வாய்களால் வயல்களுக்குப் பாய்ச்சி வேளாண்மை செய்தனர். அவர்களின் தலைநகரம் சுசா. சுமேரியாவிலே ஓர் இடத்துக்கும், ஒரு மலைக்கும் எல் லம் என்னும் பெயர் வழங்கிற்று. எல் என்பது ஞாயிற் றைக் குறிக்கும் பழந் தமிழ்ச்சொல். இந்தியாவின் தென்கோடியிலுள்ள இலங்கைத் தீவின் பழைய பெயரும் எல்லம் எல்லம் என்பதே பிற்காலங்களில் ஈழம் எனத் திரிந்து வழங்கிற்று. ஈழம் என்பதன் அடி எல் என மொழிநூலார் ஆராய்ந்து காட்டியுள்ளார்கள். எல்லம் என்னும் இடப்பெயர்களின் ஒற்றுமையால் சுமேரியர் ஒருபோது இலங்கைத்தீவினின்றும் சென்ற மக்கள் ஆவாரகளோ? என்பது ஆராயத்தக்கதாகின்றது. முற் காலத்து இலங்கையும், தென்னிந்தியாவும் பிரிந்திருக்க வில்லை; நிலத்தால் இணைக்கப்பட்டிருந்தன.

சுமேரியரின் நாகரிகம், எகிப்தியருடையவும் சிந்து வெளித்தமிழர்களுடையவும் நாகரிகங்களை ஒத்த பழமை யுடையது. ஒடக்கோன், உவண்ணு என்னும் தலைவர் களின் கீழ் சென்று பாரசீகதநிற் குடியேறிய மக்களே சுமேரியர் என அவர்களிடையே பழைய வரலாறு உண்டு. ஒடக்கோன் என்னும் சொல் ஒடங்களுக்குத் தலைவன் என்னும் பொருள் தருமு தமிழ்ப்பெயர். உவண்ணு என் னும் பெயர், துளுவமக்களிடையே இன்றும் வழங்குகின் றது அதற்குப் பூவின் அண்ணன் என்பது பொருள். சுமே ரியா, தந்தைக் கடவுளை ஆண் என்றும், தாய்க் கடவுளை அமமா என்றும் பெயர்கள் இட்டு வழிபட்டனர்.

சிந்துவெளித் தமிழரின் தந்தைக் கடவுள் ஆண்; தாய்க்கடவுள் அம்மன். சுமேரியாவிலே கிடைத்த முத்திரைகளில் சிலவற்றில் இமில் உள்ள இடபம் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இமிலுள்ள இடபங்கள் இந்தியாவில் மாத்திரம் காணப்படுவன. மக்கட்குல நூலார் தமிழரும் சுமேரியரும ஒரே குலமுறையி லுள்ளோர் என ஆராய்ந்து கூறியுள்ளார்கள். வரலாற்று ஆசிரியர்களிற் பலர், இவர்கள் இந்தியாவினின்றும் சென்று பாரசிகத்திற் குடியேறியவர்களென எழுதியுள்ளார்கள்.

## பபிலோனியர்

சுமேரியாவுக்கு வடக்கே குடியேறி வாழ்ந்த தமிழர் அக்கத்தியா (Accadians) எனப்பட்டனர். இச்சொல் ஒருபோது அந்தப் பக்கத்தில் குடியேறியுள்ளவர்கள் என்னும் பொருளில் (அப்பக்கத்தார்) வழங்கியிருக்கலாம். பின்னர் அவ்விடங்களில் சோழநாட்டினின்றும் வெளிப் போந்த ஒரு கூட்டத்தினர் சென்று தங்கி வாழ்ந்தனர். அவர்கள் அந்நாட்டுக்குச் சோழதேசம் எனப் பெயரிட்டனர். சோழதேசம் என்பதே கல்தேயா (Chaldia) எனத் திரிந்து பிற்காலத்து வழங்குவதாயிற்று. கல்தேயாவின் தலைநகர் ஊர். ஒரு காலத்தில் கல்தேயா சுமேரியா என்னும் இருநாடுகளும், ஒருங்கே இணைக்கப்பட்டுப் பபிலோனியா என்னும் பெயர் பெற்றன. பபிலோன் நாடு, இந்திய மக்களால், பவேரு எனப்பட்டது. இந்திய வணிகர் பவேருவுக்குக் கடல்வழியாகச் சென்ற வரலாறுகள் பவேருசாதகம் (கி. மு. 500) என்னும் புத்தநூலிற் காணப்படுகின்றது. பபிலோனியர் பெரிய கோயில்மைத்து, அங்கே பகற்கடவுளை வழிபட்டார்கள். பகற்கடவுள் வழிபாட்டின் காரணமாகவே அவர்கள் நகருக்குப் பபிலோன் என்னும் பெயர் உண்டாயிற்று. அவர்கள் இடபவாகனத்தின்மீது முத்தலை வேலைப்பிடித்து நிற்கும் தந்தைக் கடவுளையும், சிங்க ஊர்திமே லிருக்கும் தாய்க்

கடவுளையும வழிபட்டார்கள். கி மு. ஆறும் நூற்றுண்டில் பபிலோனில் கடைவைத்து வாணிகம் பண்ணிய வ ரா. என்பவரின் கடைக் கணக்குகள் எழுதிய களிமண் ஏடு அங்குக் கண்டுபிடிக்கபபட்டது.

## அசீரியர்

பபிலோனுக்கு வடக்கே குடியேறி வாழ்ந்த தமிழர் அசீரியர் எனப்பட்டனர். அசீரியா, சீரியா முதலிய பெயர்கள் ஞாயிற்றுக்கடவுள வழிபாடு காரணமாக சூரியன் என்னும் சொல்லினின்றும் பிறந்தன என்று வடல் (Waddell) என்னும் ஆசிரியர் கூறுவர். சூரியன் வடசொல் எனப் பலர் கருதுவர். சூரரமகளிர், சூர்மா முதல் எனப் பழந்தமிழ் இலக்கியங்களில் சூர் என்னும் சொல் பயின்று வருதலைக் காணுநர் சூரியன் ஆரியச் சொல்லாகுமோவென ஆராயற்பாலர். அசிரியர் ஞாயிற்றுக்கடவுளை அசுர் என்னும் பெயரால் வழிபட்டனர். அசீரியரின் பழைய கட்டட அமைப்புக்கள், திராவிட நாட்டுக் கட்டட அமைப்புக்களை மிக ஒத்திருக்கின்றமையின், இவ்விரு மக்களும் ஒரு பொது உற்பத்தியைச் சார்ந்தோராவர் எனப் பழஞ சரித்திர ஆராய்ச்சியாளர் கூறியிருக்கின்றனர். இம்மக்களின் நாகரிகம், கடவுள் கொள்கை முதலியன பெரிதும் பழந்தமிழரிடையே காணபபட்டன போலவன.

யூதர் தமிழ்நாட்டினின்றும் சென்று மத்தியதரைக் கடலின் மேற்குக் கரையோரங்களில் குடியேறி வாழ்ந்த மக்களாவர். கல்தேயாவின் தலைநகராகிய ஊரினின்றும் சென்று பலஸ்தீன் நாட்டிற் றங்கிய அபிரகாம் என்னும் கல்தேயரின் சந்ததியினரே யூதரும் அரேபியருமென் னும் கன்ன பரம்பரை வரலாறு உளது. கல்தேயர் தமிழர்களே என்பது முன் கூறப்பட்டுள்ளது. பலஸ்தீன்

மக்களின் பழக்கவழக்கங்கள், பழந்தமிழர் பழக்கவழக்கங்களை மிக ஒத்தன. அவர்கள் மரங்களின்கீழ் சிவலிங்கங்களை வைத்து வழிபட்டனர். ஆன்கன்றும் அவர்களால் வழிபடப்பட்டது. சிவன் என்னும் கடவுளை அவர்கள் சியன் (Cian) என்னும் பெயர் கொடுத்து வழிப்பட்டார்கள்; இறப்புப் பிறப்பால் உண்டாகும் தீட்டுக்காத்தனர். பூப்படைந்த பெண்கள் எழுநாள் வரையும் தனித்து உறைந்தார்கள். இறந்தவர்கள் பொருட்டு அவர்கள் முப்பது நாள் வரையும் துக்கம கொண்டாடினர். ஒருவர் இறந்தால், அவர் இறந்த இடத்தில் ஏழு நாட்களுக்கு விளக்குக் கொளுத்தி வைத்து உணவு படைத்தார்கள். இறந்தவரின் மரணதினம, ஆண்டில் ஒருமுறை கொண்டாடப்பட்டது. அப்பொழுது விளக்குக் கொளுத்தி வைத்து, உணவு படைத்து விருந்து கொண்டாடப்பட்டது. இன்னும் இவைபோன்ற யூதரின் பழைய வழக்கங்கள் இன்றும் தமிழ்நாட்டிற் காணப்படுவன போன்றன.

## பினீசியர்

மத்தியதரைக் கடலின் மேற்குக் கரையிலே பலஸ்தினத்துக்கு மேற்பக்கத்தே குடியேறி வாழ்ந்த தமிழர் பினீசியர் எனப்பட்டார்கள. இவர்கள் குடியேறிய நாட்டில் ஈந்து என்னும் பனைகள் அதிகம. ஆதலினாலே அவர்கள் நாடு, பனைநாடு எனப்பட்ட தென்றும், பனைநாடு என்பதே உச்சரிப்பு வேறுபாட்டால் பினீசியா ஆயிற்றென்றும் வரலாற்று ஆசிரியர்கள் சிலர் கருதுகின்றனர். பினீசியர் பரதர எனவும பட்டார்கள். இவர்கள் மொகஞ்சதரோ காலத்துக்குப் பின், மேற்கு ஆசியாவிற் சென்று குடியேறியவர்கள் ஆகலாம். இவர்கள் வழங்கிய எழுத்துப் பிராமி எழுத்தோடு ஒற்றுமையுடையது. இவ்விரு எழுத்துக்களின் நெருங்கிய ஒற்றுமை காரணமாகப் பினீசிய எழுத்துக்களினின்றே பிராமி எழுத்துக்கள் தோன்றின என்று வரலாற்றாசிரியர்கள் ஒரு காலத்திற் கருதி

னர் பிராமி எழுத்து, மொகஞ்சதரோ எழுத்தின் திரிபு இந்திய நாட்டினின்றும் வாணிகத்தின் பொருட்டுச் சென்று மேற்கு ஆசியாவிற் றங்கிய பினீசியர், பிராமி எழுத்துக்களையே வழங்கினர். பினீசியரிடமிருந்து கிரேக்கரும், கிரேக்கரிட மிருந்து உரோமரும், உரோமரிட மிருந்து மற்றைய ஐரோப்பிய சாதியினரும் எழுத்தெழுதும் முறையை அறிந்தார்கள்.

பினீசிய மக்களின் பழக்க வழக்கங்களும், கடவுள் வழிபாட்டு முறைகளும் தமிழ் மக்களிடையே காணப்பட்டன போலல்லாமல் வேறுவகையாக இருத்தல் முடியாது. இவர்கள் பெரிய ஆலயங்கள் அமைத்து அவைகளில் சிவலிங்கங்களை வைத்து வழிபட்டனர். இடபமும் இவர்களின் வழிபாட்டுக்கு உரியதா யிருந்தது. இவர்களின் தலைநகராகிய தையர்ப்பட்டினத்தில் அமைக்கப்பட்டிருந்த பகலவன் கோயிலில் மரகதத்தினுலும், பொன்னினுலும் செய்யப்பட்ட இரண்டு சிவலிங்கங்கள் நிறுத்தி வழிபடப்பட்டன என்று ஹெரதோதசு ஆசிரியர் கூறியுள்ளார். ஆற்றோரங்களில் தங்கிய மக்களைப்போல இவர்கள் தமது உணவின்பொருட்டு வேளாண்மையிற் றங்கியிருந்தாரல்லர்; உலகின் பல பாகங்களுக்கு மரக்கலங்களிற் சென்று வாணிகம் புரிந்தனர்.

## சீரியர்

பினீசியாவுக்கு வடக்கே குடியேறி வாழ்ந்த தமிழர் சிரியர் எனபபட்டனர். சூரியர் என்பதே சிரியர் என்று மாறிற்றென வடேல் என்னும் ஆசிரியர் கூறியுள்ளார். இம்மககளின் வாழ்க்கை முறைகளும், கடவுட் கொள்கைகளும் பழந்தமிழரிடையே காணப்பட்டன போன்றன. சிரியாவிலே பால்பெக் என்னும் இடத்தில் அறுபது அல்லது எழுபது அடி உயரமுள்ள தனிக்கற்றூண்களை நிறுத்திக் கட்டப்பட்ட பெரிய பகலவன் கோயிலின் அழிபாடு

இன்னும் காணப்படுகின்றது எகிப்திய சமாதிகளைப் போல, இவ்வாலயமும் வியப்பளிப்பதாயிருக்கின்றது

இம்மக்கள், முத்தலை வேலை ஒரு கையிலும், மழுவை மற்றொரு கையிலும் பிடித்து இடபவாகனத்தின் மீது வீற்றிருக்கும் தந்தைக் கடவுளையும், ஒரு கையிற் கேடகத்தையும் மற்றக் கையிற் றண்டையும் ஏந்திச் சிங்கவாகனத்தின் மீதிருக்கும் தாய்க் கடவுளையும். முழுமுதற் கடவுளர்களாகக்கொண்டு வழிபட்டனர்

## சின்ன ஆசிய மக்கள்

தமிழரில் ஒரு கூட்டத்தினர் சின்ன ஆசியாவிற் சென்று குடியேறினார்கள். அங்குக் கித்தைதி (Hettite) என்னும் ஒரு நாடு உண்டு. அங்கு வாழ்ந்த பழைய மக்களின் மொழி, தமிழுக்கு மிக இனமுடையது. இம்மக்களும் குல முறையில் மத்தியதரை மக்களைச் சார்ந்தவர்களே. இவர்களும் சிரிய மக்களைப்போல, ஞாயிற்றையும், இடப வாகனத்தின் மீது வீற்றிருக்கும் தந்தைக் கடவுளையும், சிங்க ஊர்திமேல் வீற்றிருக்கும் தாய்க் கடவுளையும் முழு முதற் கடவுளர்களாகக் கொண்டு வழிபட்டனர் திராய் (Troy) நகரில் அகழ்ந்து கண்டு பிடிக்கப்பட்ட பழம் பொருள்களின் இடையே சிவலிங்கங்கள் பல காணப் பட்டன.

பழைய இத்தாலியர் எற்றாஸ் கானியா எனப்படுவர். அவர்கள் இந்து சமுத்திரப் பக்கங்களிலிருந்து வந்தவர்கள் ஆதல்வேண்டுமென வரலாற்றாசிரியர்கள் கூறியிருக்கின்றனர். திராய் (Troy) நகரினின்றும் வந்து குடியேறியவர்களே அவர்கள் என வடல் என்பார் கூறுவர். அவர்களின் பழக்க வழக்கங்களும், கடவுள் வழிபாட்டு முறைகளும், பழந்தமிழரிடையே காணப்பட்டன போல்வன. அங்குக் கிடைத்த பழைய மட்பாண்டங்கள்,

வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட தென்னிந்திய சமாதிகளிற் கிடைத்த அவ்வகைப் பழம்பொருள்களை மிக ஒத்துள்ளன. அவர்கள் சிவலிங்கங்களை வழிபட்டனர். இத்தாலியிலுள்ள பழைய கிறித்துவ ஆலயங்களில் சிவலிங்கங்கள் வெட்டப்பட்டிருத்தலை வரலாற்றாசிரியர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

## கிரேத்தா மக்கள்

கிரேத்தா (Crete) மக்கள் தமிழ் நாட்டினின்றும் சென்று குடியேறிய மக்களேயாவர். இவர்கள் தமிழர் என்றே அழைக்கப்பட்டார்கள் என ஹெரதோதசு (Heradotus கி. மு. 480) என்னும் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார். இவர்கள் பழக்கவழக்கங்களும், இந்தியக்குடா நாட்டின் மேற்குக் கரையிலுள்ள மலையாளரின் பழக்க வழக்கங்களும் ஒரே வகையின. கிரேத்தாவில் பெண்களுக்கு ஆடவரினும் பார்க்கக்கூடிய அதிகாரம் இருந்தது. பிள்ளைகள் தாய் வழியால் அறியப்பட்டார்கள் இவர்கள் சியஸ் என்னும் கடவுளை வழிபட்டனர். சியஸ் என்பது சிவன்என்பதன் திரிபு. கிரேத்தாவில் சிவா என்னும் பெயருடைய பழைய இடமும் உண்டு. தமிழரின் சங்க நூல்களிற் கூறப்படும் ஆயரின் ஏறு தழுவுதல் போன்ற ஓவியங்கள், அங்கு அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்ட கிரேத்தா அரசரின் பழைய அரண்மனைச் சுவர்களில் எழுதப்பட்டுள்ளன. இங்குக் காணப்பட்ட மட்பாண்டங்களும், இந்தியாவிற் காணப்பட்ட பழைய அவ்வகைப் பொருள்களை ஒத்துள்ளன. இவர்கள் மரங்களின் கீழ் சிவலிங்கங்களை வைத்து வணங்கியதோடு சங்கு, கொம்பு வாத்தியங்களையும் பயன்படுத்தினர்.

## பாஸ்க்கு மக்கள்

பழைய ஸ்பெயின் மக்கள் பாஸ்க்குகள் எனப்பட்டனர். இம்மொழி தமிழுக்கு மிக நெருங்கிய உறவுடை

யது. சோயோன்மார்சல் என்பார், "இரத்தத்தால் தமிழருக்கு மிக உறவுடைய மத்தியதரை மக்கள், தமிழ் மொழியையே ஒரு காலத்தில் வழங்கினோர்களாகலாம்" என ஓரிடத்திற் குறிப்பிட்டுள்ளார். ஸ்பெயின் நாட்டில் இன்றும் சங்க நூல்களிற் காணப்படுவது போன்ற பாட்டிச் சண்டைகள் நடைபெறுவதுண்டு. பாஸ்க்குகள் மத்திய தரை மக்களைச் சேர்ந்தோராவர். இவர்கள் சிவலிங்கம் இடபம் முதலியவைகளை வழிபட்டனர். அமெரிக்க வெள்ளிக் காசில், (Dollar) காணப்படும் ஒன்று சிவலிங்கத்தின் அடையாளம் என்றும், வளைவு எட்டின் பகுதி என்றும் சொல்லப்படுகின்றன. இந்நாணயக்குறியை ஸ்பானியரே ஆரம்பித்தனர். அது ஆதியில் தூண் நாணயம் (Pillar coin) எனப்பட்டது

## துருயிதியர் (Druids)

பிரான்சிலும் பிரித்தனிலும் குடியேறியிருந்த துருயிதியர் என்னும் மக்கள் திராவிட மரபினரே யாவர். இங்கிலாந்திலே அறிவாளிகள் திராவிட் எனப்பட்டார்கள். அம்மக்கள் சிவலிங்கங்களையும், கல் வட்டங்களையும் வழிபட்டனர். பிரிதன் என்பது பாரத வருடம் என்பதன் திரிபு (Waddell) பினிசியரே இங்கிலாந்திற் குடியேறிப் பிரித்தானியர் எனப்படுவாராயினர்.

பழைய அமெரிக்கரும் இந்திய நாட்டினின்றும் சென்று குடியேறிய தமிழர்களே யென்றும், அவர்களின் மொழி, தமிழைப் போலவே ஒட்டுச் சொற்களை உடையதென்றும், ஒட்டுச் சொற்களுடைய மொழிகள் எல்லாவற்றுக்கும் தொடக்கம் ஒன்று என்றும், அவர்கள் உறவின் முறையினரை அழைக்கும் முறை, தமிழ் நாட்டிற் காணப்படுவது போலவே உள்ளதென்றும், ஆர்தன் (Ortan) என்னும் ஆசிரியர் நன்கு ஆராய்ந்து விளக்கியுள்ளார்.

# இக்கருத்துக்கள் புதியனவல்ல

இக்கருத்துக்கள் புதியனவல்ல. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்கள் காலத்திலேயே இக்கொள்கைகள் நன்கு ஆராய்ந்து அறியப்பட்டிருந்தன. அக்கருத்துக்களைத் திரட்டித் தமிழ் இசையைப் பற்றிய நூல் எழுதிய ஆபிரகாம பண்டிதர், தமது கருணாமிருத சாகரம் என்னும் நூலகத்தும் கூறியுள்ளார் அது வருமாறு.

" அதன் முன் தமிழ்நாட்டிலிருந்து மெசொபெதேமியா, பபிலோன், கல்தேயா, ஆசியா முதலிய விடங்களுக்குப் போய்க் குடியேறி இராச்சியங்களை ஸ்தாபித்துப் பிரபலமாய் ஆண்டுகொண்டிருந்த தமிழர்கள் மிகுந்த நாகரிகமுடையவர்களாய்ப் பல பல கலைகளிற் றேர்ந்தவர்களாய்ப் பற்பல சாதியினராய் அழைக்கப்பட்டார்கள் என்றும் அவர்கள் பேசிய தமிழ் மொழி, எபிரேய கல்தேய, பாபிலோனிய, அசீரிய, சுமேரிய, பாரசீக, பேர்குயிய, பிராகிர்த, சித்திய, ஆங்கிலோ, சேர்மனிய, சமஸ்கிருத பாஷைகளில் மிக ஏராளமாகக் கலந்து வருவதனால் தமிழ் மக்களே மிகப் பூர்வ மக்களாய் உள்ள குடிகளென்றும், அவர்கள் பல கலைகளிலும் சங்கீதத்திலும் தேர்ந்திருந்தார்களென்றும், அவர்களிருந்த நாடு கடலால் கொள்ளப்பட்ட காலத்தில் தங்குதற்குச் சமீபத்திலுள்ள ஆசியா, சின்ன ஆசியா, ஆபிரிக்கா, அமெரிக்கா, ஒஷினியா என்னுங் கண்டங்களின் கரையோரங்களில் தங்கினார்களென்றும், தப்பிப் பிழைத்தவர்களின் கலைகளின் தேர்ச்சிக் கேற்ற விதமாய் அங்கங்கே சங்கீதம், சிற்பம், சோதிடம் முதலிய அருங்கலைகள் விருத்தியாகிக் கொண்டு வந்தனவென்றும், நாம் காண்பதற்கு உதவியாகச் சில சரித்திரக் குறிப்புக்களும் சொல்லியிருக்கிறேன். சுருக்கமாகச் சொல்லுமிடத்துச் சரித்திரகாலம் ஆரம்பிப்பதற்கு வெகு காலத்திற்கு முன்னதாகவுள்ள லெமூரியா நாடு, தமிழ்நாடாயிருந்ததென்றும் அதில் வசித்து வந்தவர்கள் தமிழர்களாயிருந்தார்களென்றும் லெமூரியா

விற் பேசப்பட்டு வந்த பாஷை தமிழா யிருந்ததென்றும் அது இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழாக வகுக்கப் பட்டு இலக்கண வரம்புடன் மிகுந்த தேர்ச்சியுடையதா யிருந்ததென்றும், அதன்பின் உண்டான பிரளயங்களில் அந்நாடு, கொஞ்சங் கொஞ்சமாகக் கடலால் விழுங்கப் பட்ட பின், பல பல கலைகளும் இசைத்தமிழைப்பற்றிச் சொல்லும் அரிய நூல்களும், கொஞ்சங் கொஞ்சமாக மறைந்து, தற்காலம் அனுபவத்திலிருக்கும் சொற்ப முறையே மிஞ்சியிருக்கிறதென்றும் தெளிவாக அறிவோம்.

"உலகத்தவர் எவராலும இதன்மேல் நுட்பமாய்ச் சொல்லமுடியாதென்று கருதும்படி மிகுந்த தேர்ச்சி பெற்ற சங்கீத நூலைப்போலவே, சிற்பம், சோதிடம், கணி தம, வைத்தியம், வாதம், யோகம், ஞானம் முதலிய அருங் கலைகளும், மற்றும் பாஷைகளில் திருப்பப்பட்டு வந்திருக் கின்றன வென்றும் நூலாராய்ச்சி செய்யும் அறிவாளி கள் காணபார்கள்."

பேராசியர் சுந்தரம் பிள்ளையவர்களது கருத்து இவ் வகையிற்று ஆகையினாலேயே அவர்கள், "சதுமறை ஆரியம் வருமுன் சகமுழுதும் நினதாயின்-முதுமொழி நீயனாதி என மொழிகுவதும் வியப்பாமே" என முழங் குவராயினர்.

மத்திய தரை நாடுகளிற் குடியேறியிருந்த மக்களில் ஒரு பிரிவினர், வடக்கே குளிர் மிகுந்த நாடுகளிற் சென்று தங்கி உடல் வெண்ணிறம் ஏறப்பெற்றனர் ஆரியர் என்னும் மக்கட்குழுவினர் வடதுருவ நாடுகளில் வாழ்ந்து கொண்டிருந்தவாகளாவர் எனப் பால கங்காதர திலகர் நன்கு ஆராய்ந்து காட்டியுள்ளார். அவர்கள் நூல்களில் தேவர் எனக் கூறப்படுவோர் ஆரியரேயாவர். தேவர் களுக்கு இரவு ஆறுதிங்கள்; பகல் ஆறு திங்கள் எனப்

புராணங்களுங் கதைகளும். துருவநாடுகளில் ஆறுமாதம் இரவும், ஆறுமாதம் பகலும் உண்டு என்பதைப் பள்ளிச் சிறுவரும் நன்கு அறிவர். அவர்கள் மத்திய ஆசியாவிற் றங்கி மாட்டு மந்தைகளை மேய்த்து அவை தரும் பயன்களைக் கொண்டு வாழ்ந்தனர். அப்போது நீண்டகாலம் மழை பெய்யாமையால், அவர்களின் ஆடுமாடு முதலியன மேய்வதற்குப் புற்கிடைப்பது அருமை ஆயிற்று. ஆகவே அவர்கள் பல திசைகளை நோக்கிக் கூட்டங் கூட்டமாகச் சென்றனர். அவ்வாறு சென்றவர்களுள் ஒரு கூட்டத்தினர் இந்தியாவின் வடமேற்கே உள்ள கைபர் கணவாய் வழியாக இந்தியாவை அடைந்தனர்: இது இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய (கி. மு 2000) நிகழ்ச்சி.

## ஆரியருக்கும் தமிழர்களுக்கு மிடையிற் போர்

ஆரியருக்குந் தமிழர்களுக்குமிடையில் நீண்டகாலம் போர் நடந்தது. இறுதியில் ஆரியர் பஞ்சாப் மாகாணம் முழுமையுங் கைப்பற்றினர். இதற்கிடையில் ஆரியருக்குந் தமிழருக்குமிடையில் திருமணக் கலப்பு உண்டாயிற்று. இக்கலப்பாற் றோன்றிய மக்கள் தம்மை ஆரியர் எனக் கூறிக்கொண்டனர். அவர்கள் கங்கைச் சமவெளிகள் வரையிற் சென்று தமிழர் இராசியங்களைக் கைப்பற்றினர். விந்திய மலைக்கு வடக்கேயுள்ள நாடு, ஆரியவர்த்தம் எனப்பட்டது.

## ஆரியர், தமிழரின் கொள்கைகளைப் பின்பற்றுதல்

ஆரியர் இந்திய நாட்டை அடைந்தபோது தாழ்ந்த நாகரிக நிலையில் இருந்தனர்... ..உரோமர், கிரேக்கர்களைப் பின்பற்றி நாகரிகத்தில் உயர்ந்ததுபோல, ஆரியமக்களும் அரசியல், சமயம் முதலிய கொள்கைகளில் தமிழரைப் பின்பற்றி உயர்வடைந்தனர்.

# மக்கட் குலங்கள்

இவ்வுலகிலே படைப்பினால் வேறுபட்டவர்களோ என்று ஐயுறும்படியான வெவ்வேறு நிறமும் தோற்றமும் உடைய மக்கள் வாழ்ந்து வருகின்றனர். இதன் காரணம் ஆராயற்பாலது. ஆதியிற்றோன்றி வாழ்ந்த மக்கள், கறுப்பு அல்லது கபில நிறமுடையர். பின்பு அவர்கள் வெவ்வேறு வெப்ப தட்பமுடைய நாடுகளிற் சென்று தங்குவாராயினர். வெப்பதட்ப நிலை மக்களின் நிறத்தை மாற்றத்தக்கது. செய்யும் தொழில், உண்ணும் உணவு முதலியவைகளாலும் உடலில் சிறு மாற்றங்கள் உண்டாகத்தக்கன. குளிர் மிகுந்த துருவநாடுகளில் வாழ்ந்தோர் வெண்ணிறமடைந்தனர். துருவநாடுகளுக்குத் தெற்கே நடுக்கோடு வரையிலும் வாழ்ந்த மக்கள், படிப்படியே வெண்மை குறைந்து கருமை மிகுந்து இருந்தனர். நிறத்தினால் வெள்ளை, கறுப்பு, மஞ்சள் என்று பிரித்தறியப்படும் வெவ்வேறு மக்கட் குலங்கள் தோன்றின. ஒரு மக்கட் குலத்தினர், வேறு மக்கட் குலத்தினர்களோடு கலக்கும்போது புதிய குலத்தினர் தோன்றுவது இயல்பு. இதற்கு எடுத்துக்காட்டு, யூரேசியராவர். இவ்வுலகில் ஆதியிற்றோன்றிய மக்கட்குலம் ஒன்றே. நாளடைவில் பல மக்கட் குலங்களாகப் பிரிந்தது என்பது மக்கட்குல நூல் ஆராய்ச்சியால் தெளிவுறுகின்றது.

ஹேரஸ் பாதிரியார், இந்திய வரலாற்று இதழில் (Indian Historical Review—1936) எழுதியிருப்பதன் சுருக்கம் பின்வருமாறு.

"ஆரியர் இந்திய நாட்டுக்கு வருகின்ற காலத்தில் தமிழர் சிறிதும் நாகரிகமில்லாதவராய்க் காட்டு மக்களைப் போல இருந்தார்கள் எனப் பதினைந்து ஆண்டுகளுக்குமுன் சிலர் கருதுவாராயினர். அதனை வரலாறு தொடர்பான எத்தகைய ஆதாரங்களையுங்கொண்டு நாட்டுதல் முடியாது

திராவிட அரசர் பலரும், திராவிடக் கூட்டத்தினர் சிலரும், காரணமின்றித் தம்மைத் திராவிடர் எனக்கூறிக் கொள்ள நாணி, ஆரியரென்று கூறிக்கொண்டனர். சிந்து வெளியிற் கண்டுபிடிக்கப்பட்ட மோகஞ்சதரோ என்னும் திராவிடரின் பண்டைய நகரம் கண்டு பிடிக்கப்பட்ட பின்பு, ஆர். டி. பனெர்ஜி (R D Banerji) என்பார் திராவிடர், இந்தியாவைப் புதிதாக வந்தடைந்த ஆரியரிலும் பார்க்க, மிக உன்னத நாகரிகம் படைத்திருந்தார்கள் எனச் சொல்லி, ஆரிய உணர்ச்சிக்கு எதிராக அறைகூவினர்

"சுமேரியரின் ஆதியிருப்பிடம், அவர்களின் கன்னபரம்பரைக் கதைப்படி கிழக்கில் உள்ளது கி. மு. முதலாம் நூற்றாண்டில் விளங்கிய பெரோசஸ் (Berosus) என்னும் பபிலோனிய குரு. சுமேரியாவில் நாகரிகத்தையும் எழுதவெழுதும் முறையையும் கொண்டுவந்து பரப்பிய பெருமக்கள் இருவர் பெயர்களைக் குறிப்பிட்டுள்ளார். அவர்களுள் ஒருவரின் பெயர் உவண்ணு அதற்கு மலரின் அண்ணன் என்று பொருள் உவண்ணு என்பது கிரேக்கரின் உச்சரிப்பு முறையில் ஒஅன்னிஸ் எனத் திரிந்து வழங்கிற்று உவண்ணு என்னும் பெயர் துளுவ மக்களிடையே இன்றும் காணப்படுகின்றது. மற்றப் பெயர் ஒடக்கோன். இது ஒடங்களுக்குத் தலைவன் என்னும் பொருளில் தமிழில் வழங்குகின்றது

"கிறித்துவ வேதத்தின் பழைய ஏற்பாடு, நோவாவின் சந்ததியினர் பலரைப்பற்றிக் கூறிய பின், 'கிழக்குத்திசையினின்றும் வந்து அவர்கள் சென்னார் (சுமர்) என்னும் சமவெளியில் வாழ்ந்தார்கள் அவர்களுள் ஒவ்வொருவனும் தனது அயலவனை நோக்கிக் களிமண்ணிற் கல்லரிந்து சூளை இடுவோம் என்று சொன்னான். அவர்கள் கல்லுக்குப் பதில் செங்கல்லையும், களிமண்ணுக்குப் பதில் சுண்ணும்பையும் பயன்படுத்தினார்கள்' விவிலிய வேதத்திற் கூறப்படும் அழகிய கட்டடங்கள் மொகஞ்சதரோக் கட்

டடங்கள் போன்றன. சுமேரியருக்கு முற்பட்ட மக்கள் களிமண்ணாற் கட்டி வாழ்ந்த குடிசைகள், செங்கற்கட்டடங்களில் வாழ்ந்த மக்களுக்கு (இந்தியாவினின்றும் வந்த மக்களுக்கு) விரும்பத்தக்கனவாயிருக்கவில்லை. மொகஞ்சதரோ மக்கள் சுமேரியாவோடு மாத்திரம் தொடர்புடையவர்களா யிருந்தாரல்லர். மொகஞ்சதரோவிற் கிடைத்த முத்திரை ஒன்றில் மாட்டுச் சண்டையைக் காட்டும் படம் காணப்படுகின்றது. இவ்வகை மாட்டுச் சண்டை இப்பொழுது ஸ்பெய்ன் நாட்டில் நடைபெறுகின்றது. இவ்வகை மாட்டுச் சண்டைகளைக் குறிக்கும் ஓவியங்கள் கிரேத்தாவிலுள்ள பழைய அரண்மனைச் சுவர்களில் வரையப்பட்டிருக்கின்றன. கிரேத்தா மக்களும் ஸ்பெயின் மக்களும் மத்தியதரை மக்கட் கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் எனப்படுகின்றனர். இக்கால மக்கட்குல நூலார், திராவிடரும் இக்கூட்டத்தைச் சேர்ந்தவர்கள் எனக் கூறுகின்றனர். இக்கொள்கை இப்பொழுது மொகஞ்சதரோவில் நடத்தப்பட்ட பழம்பொருள் ஆராய்ச்சியால் வலியுறுகின்றது. பழைய தமிழ் நூல்கள் ஏறுதழுவுதலைப்பற்றிக் கூறுகின்றன. இது முன்பு குறிக்கப்பட்ட மொகஞ்சதரோ முத்திரைபோலும், கிரேத்தாவிலுள்ள ஓவியங்களோடு ஒப்பிட்டு ஆராயத்தக்கது.

"இந்தியாவை அடைந்தபோது, ஆரியர் எழுத்தெழுத அறியாதிருந்தனர். அவர்கள் தமது பகைவர்களாகிய தாசுக்களின் எழுத்துக்களையே பயன்படுத்தினர். அவ்வெழுத்து இருவகையாக வளர்ச்சியடைந்தது. வட இந்தியாவிலுள்ள ஆரியரும், ஆரியராக்கப்பட்ட திராவிடரும் அதனை ஒரு முறையில் விருத்தி செய்தனர். தென்னிந்தியாவிலும் இலங்கையிலும் அது இன்னொரு முறையில் வளர்ச்சியுற்றது.

"மொகஞ்சதரோவிற் கிடைத்த ஆயிரத்தெண்ணூறு பட்டயங்களைப் படித்த எனக்கு, மத்தியதரை நாடுகளி

லிருந்து மக்கள் இந்தியாவை அடைந்தார்கள் என்னும் கொள்கை நேர்மையுள்ளதென நன்கு தெளிவாகின்றது. இவ்விரு நாடுகளின் எழுத்து வளர்ச்சி, இருநாடுகளின் சமயம், அரசரின் பட்டப் பெயர் (சந்திர குலம், சூரிய குலம் போல்வன) இராசிகளின் எண், பெரோசஸ் என்பவரின் பழைய வரலாற்றுக் குறிப்பு, விவிலிய வேதத்தின் ஆதி ஆகமத்தில் (Gen. 11-1-5) கூறப்படுவது ஆகியன எல்லாம், மக்கள் இந்தியாவிலிருந்து மத்திய தரை நாடுகள் ஆபிரிக்கா, சைபிரஸ், கிரீஸ், இத்தாலி, ஸ்பெயின் முதலிய நாடுகளிற் குடியேறி, ஐரோப்பாவிலே பிரிட்டன் தீவுகள் வரையிற் பரவினார்கள் என்பதை வலியுறுத்துகின்றன இவர்கள் சென்ற பாதை, இலங்கை முதல் அயர்லாந்து வரையில "தொல்மென்' (Dolmen) என்றும் மூன்று கற்களால் எடுக்கப்பட்ட கட்டடங்களாலும், நிறுத்தப்பட்ட தனிக் கற்றூண்களாலும் தொடர்பாக அடையாளப் படுத்தப் பட்டிருக்கிறது. மத்திய தரைச் சாதியினர் என்று மக்கட் குல நூலாரால் கொள்ளப்படும் ஊக்கமும் நாகரிகமு முடைய திராவிட மக்கள், காரணமின்றித் தாழ்வாகக் கருதப்படுவாராயினர்."

## பார்ப்பனர் யார்?

தமிழ் மக்கள் வரலாற்றில், பார்ப்பனர் யார்? என்பது நன்கு ஆராய்ந்து தெளிதற்குரிய பொருளாகும். இஞ்ஞான்று பார்ப்பனர், தம்மை ஆரியர் எனக் கூறி வருகின்றனர் பொது மக்களும் அவர்களை அவ்வினத்தினர் எனவே கருதி வருகின்றனர். இதனைக் குறித்து வரலாற்று முறையில் ஆராய்வோம்.

நம் இந்திய நாட்டிலே கன்னியாகுமரி முதல் இமயம் வரையில், ஒருகால் வாழ்ந்தோர் கலப்பற்ற தமிழர்களென்பது வரலாற்று நூலார் எல்லார்க்கும் ஒப்ப முடிந்த முடிவு. இற்றைக்கு நாலாயிரம் ஆண்டுகளுக்கு முன்

யர் என்னும் நிறத்தால் வேறுபட்ட புதிய சாதியினர் இந்திய நாட்டை அடைந்தார்கள் என்பது முன் ஓரிடத்திற் கூறப்பட்டுள்ளது. அவர்கள் சில காலம் கலப்பின்றி வாழ்ந்து, பின்பு தமிழ் மக்களோடு கலந்து ஒன்றுபட்டனர். இந்திய நாட்டின் அயலே நின்றுவந்த ஆரியரிலும், இந்திய நாட்டில் வாழ்ந்துகொண்டிருந்த தமிழர் எண்ணில் மிகப் பலராவர். தமிழர் பெருந்தொகையினராகவே ஆரியர் தமிழ் வெள்ளத்துள் மறைந்துபோயினர். ஆயினும் கலப்பினுற்றோன்றிய மக்கள் தம்மை ஆரியர் எனக் கூறிக்கொண்டனர். இருவேறு மக்கள் ஒன்றுபட்டுக் கலக்கும்போது மொழி, மதம், பழக்க வழக்கம் ஆகியவைகளும் கலப்புற்றுச் சில புதிய மாறுதல்கள் உண்டாவது இயல்பு. ஆரியர் இந்தியாவை அடைந்தபோது, மந்தை மேய்ப்பவர்களாகவும் தாழ்ந்த நாகரிகமுடையவர்களாகவும் இருந்தனர். தமிழர் எல்லா வகையிலும் சிறந்து உயர்ந்த நாகரிகம் உடையவர்களாய் விளங்கினுர்கள். நாகரிகத்திற் றாழ்ந்தவர்கள் நாகரிகத்தில் உயர்ந்தவர்களைப் பின்பற்றுதல் எல்லாக் காலங்களிலும் காணப்படும் இயல்பு.

ஆரிய மக்களின் மொழி, மதக்கொள்கை முதலியன சிறிது சிறிதாக மாற்றமடைந்தன. ஆரியர் ஆதியில் வழங்கிய மொழி பிராகிருதம் எனப்படும். இதற்கு இலக்கண வரம்பு இல்லை. இம் மொழி வடக்கே வழங்கிய தமிழோடு கலந்து, பல மொழிகளாகப் பிரியத் தொடங்கியபோது பிராகிருதப் பற்றுடையார் அம் மொழிக்கு இலக்கணஞ் செய்து, அதனைச் சீர் திருத்தஞ் செய்தனர். அவ்வாறு செய்யப்பட்ட மொழி சமக்கிருதம் எனப்பட்டது. சமக்கிருதம் என்பதற்கு நன்றாகச் செய்யப்பட்டது என்பது பொருள். இம்மொழி இக் காலத்திற் போல, இலக்கிய மொழியாயிருந்ததேயன்றி

மக்களால் ஒருபோதும் பேசப்படவில்லை. * சமக்கிரு தத்தின் வழிவந்தன என்று கருதப்படும் வடநாட்டு மொழிகள், அமைப்பில் தமிழை ஒத்துள்ளனவென்று மொழியாராய்ச்சியாளர் கூறுகின்றனர். ஒரு மொழியின் இலக்கணத்தை, ஒரு ஆற்றின் இரண்டு அணைகளுக்கும், சொற்களை அவற்றின் இடையே ஓடும் நீருக்கும ஒப்பிட லாம். சொற்கள், காலத்துக்குக் காலம் மாறுபடலாம ஆனல் இலக்கணம் மாறுபடாது ஆகவே, வடக்கே வழங் கிய தமிழ், பிராகிருதச் சொற்கள் பலவற்றையும் அவற்றின் சிதைவுகளையும் ஏற்றுக்கொண்டு, இப்பொழுது வடநாட் டில் வழங்கும் பலமொழிகளாக மாறியுள்ள தென்பது நன்கு தெளிவுறுகின்றது.

மொழியில் இவ்வகை மாற்றம உண்டானது போலவே, ஆரியரின் சமயத்திலும் பல மாற்றங்கள் உண் டாயின. ஆரியர், இந்தியாவுக்கு வெளியே வாழ்ந்த காலை, மந்தை மேய்ப்பவர்களாய் அலைந்து திரிந்தனர். ஆகவே அவர்கள் நிலையான கோயில்கள் அமைத்துக் கடவுளை வழிபட முடியவில்லை. அவர்கள் தாம் சென்ற இடங் களில் கடவுளுக்குப் பலி செலுத்தி வந்தார்கள். இந்தி யாவை அடைந்த பின்பும், ஆரியர் இவ்வழக்கைக் கைக் கொண்டு வந்தனர். அவர்களுள் ஒருகாலத்தில் வருணப் பிரிவோ, சாதிப் பிரிவோ இருக்கவில்லை. குடும்பத் தலை வன் கடவுளருக்குப் பலி செலுத்தி வந்தான். அரசா செய்யும் வேள்விகளில் பலி செலுத்தும் புரோகிதர் சிலர்

---

* பாலி மொழி, இலங்கையில் மக்களாற் பேசப்படவில்லை. ஆனல் அங்கு அது இலக்கிய மொழியாக இருந்து வந்தது. பாலி, சமக்கிருதச் சொற்களை ஏற்றுக்கொண்டு இலங்கை மக்கள் வழங்கிய மொழி சிங்களமாக மாறிற்று. கி. பி. 10-ம் நூற்றாண் டளவில், முதல் முதல் சிஙகளமொழியில் நூல் செய்யப்பட்டது. சிங்களமொழி அமைப்புத் தமிழை ஒத்துள்ளது. இது சமக் கிருதச் சொற்கள் தமிழுடன் சேர்ந்து, அதனை வேறுபடுத்திய மைக்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

இருந்தனர். ஆரியர் நாடுகளை வென்று பெரிய அரசர்களானபோது, வேள்விகள் ஆடம்பரங்களுடன் செய்யப்பட்டன. அக்காலத்தில் பிராமணங்கள் என்னும் வேள்விக்கிரியைகளைக் கூறும் நூல்கள் எழுதப்பட்டன. அக்கிரியை முறைகள், இருக்குவேத காலம் முதல், பிற்காலம் வரையில் தமிழரின் ஆகம முறைகளைப் பின்பற்றிச் சிறிது சிறிதாக வளர்ச்சியடைந்தனவாகும். பிராமணங்களைப் பலர் பயின்றனர். பிராமணங்களில் வல்லுநர் பிராமணர் எனப்பட்டனர். அவர்கள் கோயிற் குருமாரல்லர் என்பது நன்கு கருத்திற் பதித்துக்கொள்ளவேண்டியது. வேள்விச் சாலைகளில் பிராமணருக்குத் தக்க கைம்மாறு கிடைத்தது. அரசன் அவர்களை நன்கு மதித்தான். இவைகளால் தூண்டப்பட்டுப் பலர் பிராமணங்களைப் பயின்றனர், ஒரே தொழில் புரியும் மக்கள், ஒரு இடத்தில் அளவுகடந்து பெருகுவார்களானால், அவர்கள் வெவ்வேறு இடங்களிற் சென்று தமது தொழிலைப் புரிந்து வாழ்வது இயல்பு.

பிராமணரிற் பலர் தென்னாடு போந்தனர். அவர்களின் வருவாய்க்கு வேள்விகள் இன்றியமையாதன. ஆகவே அவர்கள் தமிழ்நாட்டு அரசரை அணுகி, அவர்களைத் தம் மதத்துக்குத் திருப்ப முயன்று வந்தார்கள். முற்காலங்களில் புதிய சமயங்களைப் பரப்புவோர், முதலில் அரசனையே தமது சமயத்துக்குத் திருப்புவது வழக்கம். இது கூன்பாண்டியன் சைன மதத்தைக் கடைப்பிடித்தது போன்ற வரலாறுகளை நோக்கி அறிக. தமிழ்நாட்டு அரசர் சிலர், அவர்கள் மதத்தைத் தழுவி வேள்விகள் புரிந்தனர். பிராமணருக்கு அரசனின் நன்மதிப்பும், செல்வாக்கும் உண்டாயின.

தமிழ்மக்கள், ஆலயங்கள் அமைத்து அங்குக் கடவுளை வழிபட்டு வந்தார்கள். ஆலயங்களைக் கண்காணிப்பவர் பார்ப்பார் எனப்பட்டனர். ஆதியில் அரசனே பார்ப்பானாக விருந்தான். பிற்காலங்களில் உயர்ந்த மரபிலுள்

ளோர் பார்ப்பாராக விருந்தனர். பார்ப்பார் ஐயர் எனவும் பட்டனர் ஐயன் என்பது கடவுளைக்குறிக்க வழங்கும் பெயர்களுள் ஒன்று. ஐயனின் பணிவிடைகளைச் செய்தமையால் பார்ப்பார் ஐயர் எனவும் பட்டார்கள் ஐயன் என்பதற்கு ஐயனுடைய வேலையாட்கள் என்பது பொருள். ஐயர் என்னும் சொல் மேற்கு ஆசிய நாடுகளிலும கடவுளைக்குறிககு வழங்கிற்று. ஐயாமார் பொது மக்களின் புரோகிதருமாக விருந்து வந்தனர்.

வடநாட்டினின்றும் வநத பிராமணருக்குச் செல்வாக்கு உண்டாகவே, அவர்கள் தமிழ்ப் பார்ப்பனர்களிடையே திருமணக்கலப்புடையராயினர். வேள்விகள் புரியும பிராமணருக்கு நன்மதிப்பும் வருவாயும் உண்டாவதை நோக்கிப், பார்ப்பனரும பிராமணங்களைப் பயின்று அரசருக்கு வேள்விகள் செய்யும புரோகிதராயினர், அவர்கள் தம்மை ஆரியர் எனச் சொல்லிக்கொண்டதோடு தமக்குச் சமய முதல் நூல்கள் இருககு முதலிய நூல்கள் எனவும, தமக்குரிய மொழி, சமஸ்கிருதமென்றும் சாற்றுவாராயினர். பாாப்பாா தமது மொழி ஆரியமெனக் கொண்ட காலத்து, அரசர் ஆணையினல் அது சமயமொழியாககபபட்டுத் திருக்கோயில்களிலும் நுழைவதாயிற்று. பார்ப்பனரிடையே நிறவேறுபாடு பலவாகக் காணப்படுதல் வடநாட்டு மக்களோடு கலநத கலப்பின் அளவைக் காட்டுவது இவாகளின் இயல்பை இந்தியநாட்டு யூரேசியர்களோடு ஒபபிடலாம். பார்பனரல்லாதாரிடையும் பிராமணர் கலப்புடையா.* ஆரியரல்லாத மந்திரி வித்தைக்காரரும் பிற திராவிடரும் பிராமணராஞர்கள். தாழ்நத வகுப்பினரிடையே பிராமணர் பெண்களை மணந்துகொண்டார்கள் என்பதற்குப் பல சான்றுகள் உண்டு.

* The non Aryan magicians and the Dravidians became Brahmans. South Indian tradition records numerous instances of Brahmans as taking wives from the lower castes In many cases non-Brahmans were admitted into the Brahmana caste as sufficient Brhmanas were not available when the reformed Indo-Aryan religion obtained referance—Prehistone ancient and Hindu India—P. 38—R D Banerji.

# வடமொழி தென்மொழிக்கலப்பு

பார்ப்பனர் தம்மை ஆரியர் எனக்கொண்டு வடமொழியைப்பயின்று வந்தமையாலும், சமக்கிருதம் சமயமொழியாயினமையாலும், சைன புத்த மதத்தினர் தத்தம் மதங்களைத் தென்னாட்டில நுழைக்க முயன்றபோது, அவர்களுடன், எதிர்த்து வாதமபுரியும் பொருட்டுத் தமிழறிஞர் வடமொழியைப் பயின்று அம்மொழியில் எழுதப்பட்டுள்ள புத்த சைன நூல்களைப் பயின்றமையாலும் தென்னாட்டில் வடமொழிப்பயிற்சி அதிகமாயிற்று. இதனால் சமயத்தொடர்பான வடமொழிச் சொற்கள் பல தமிழிற் புகுந்து வழங்கலாயின. தமிழ்ப்புலவர்கள் தாம் இயற்றும் நூல்களில் வடசொற்கள் புகாமல் இயன்றளவு தவிர்த்து வந்தனர். பார்ப்பன வகுப்பினர், இம்முறையைக் கையாளவில்லை. அவர்கள் தமிழுடன் வடமொழிச் சொற்களைப் பெரிதுங் கலந்து வழங்குவாராயினர். அவர்களால் கடவுண்மொழி எனக் கருதப்பட்ட சமக்கிருதமொழிச்சொற்கள் தமிழுடன் கலப்பதனால் தமிழுக்குக் கடவுள் மணம் உண்டாமென அவர்கள் நினைத்தார்கள் போலும்! ஒரு மொழிக்குரிய சொற்களை இன்னொரு மொழியிற்கொண்டு வழங்க வேண்டுமாயின், அவை அம்மொழிக்கேற்ற ஓசைப்படி மாற்றி அமைக்கப்படுதல் வேண்டும்; இல்லையேல் அவைகளை இன்னொருமொழியிற் சேர்க்காது தவிர்த்தல்வேண்டும். இவ்விதி கருத்திற் கொள்ளப்படாது, வடசொற்கள் வடமொழி உச்சரிப்பு முறையோடு தமிழில் வந்து வழங்கத் தலைப்பட்டமையாற் போலும், தொல்காப்பியனார் வடசொற்கள் தமிழில்வந்து வழங்குங்கால் வடவெழுத்தை நீக்கி வழங்கப்படுதல் வேண்டும், (வடசொற்கிளவி வடவெழுத்தொரீஇ எழுத்தொடு புணர்ந்த சொல்லாகுமே) என ஆணை இடுவாராயினார்.

தமிழ், தமது சொந்தமொழி யன்றெனவும், சமக்கிருதம் தமது சொந்தமொழி யெனவும் கருதினமையால், பார்ப்பனர், தமிழைப் பிறமொழிக் கலப்பின்றித் தூய்மை

பாக வழங்குதற்கு அக்கறை கொள்ளவில்லை! தாம் அபி மானித்த வடமொழிச் சொற்களைப் பெரிதும் தமிழிற் கலந்து வழங்குவாராயினர். இது எவ்வளவுதூரம் சென்றிருந்த தென்பதைப் பெருந்தேவனார் பாரத வெண்பாவின் இடையிடையே காணப்படும் மணிபிரவாள நடையில் எழுதபபட்ட வசன பாகங்களை நோக்கி அறிக.

தமிழ்ப்புலவர்கள் இதற்குப் பெரிதும் ஆற்றாராய் வருத்தமுற்றாக, காலிற்றைத்த கொடு முட்களைக்களைவது போலத், தமிழின் இனிய ஓசைக்கு ஏலாத வடமொழிச் சொற்களை நீக்கியும், அங்ஙனம் நீக்குவதற்கு இயலாது டககள் ஆட்சியில் வந்துள்ள சொற்களைத் தமிழ் இயைபுக் கேற்ப மாற்றியும் வந்தனர்.

பிராமணர் தென்னாட்டுககு வந்து செல்வாக்குப் பெற்ற காலம் முதல் தமிழ் நாட்டில் வடமொழிக் கட்சி, தென்மொழிக் கட்சி என இருகட்சிகள் இருந்து வருகின்றன. வடமொழிக் கட்சியினர், தமிழினும் வடமொழி உயர்ந்ததென்றும், அது கடவுள்மொழி என்றும், அதினின்றுமே தமிழுக்கு எழுத்து முதலியன வந்தன வென்றும் வாதிப்பர. தமிழ்க்கட்சியினர், தமிழ் மிக இனிமையுடைய தென்றும், அதில் பாடப்பட்ட தெய்வீகப் பாடல்கள் புதுமைகள் பல விளைத்தன வென்றும், தமிழ் வடமொழியிலும் பாாக்க உயர்ந்த தென்றும் கூறுவர். முற்காலத்தில் வரலாற்று ஆராய்ச்சி அறியப்படாததா யிருந்தமையின் அவர்கள் வடமொழி தென்மொழிகளின் உயர்வை நாட்டுதற்கு வரலாறு தொடாபான ஆதாரங்களை அறிநதிருக்கவில்லை வரலாற்று ஆராய்ச்சி மிகுந்துள்ள இககாலத்திலோ தமிழ்மொழியின் போக்கைப் பின்பற்றியே இன்றைய சமஸ்கிருத மொழி நிலவுகின்றதென்றும், அம்மொழிக்குரிய எழுதது முதலியன தமிழிலிருந்தே கடன் வாங்கப்பட்டனவென்றும், போதாயனர், காாத்தியாயனர் சாணக்கியர், இராமானுசர், மாதவர், சங்கரர், நீலகண்டர் போன்ற தமிழர்களே அம்மொழி

யைப் பயின்று அம்மொழியில் அரிய நூல்களைச் செய்து அதனையும் வளம்படுத்தினர்களென்றும் எளிதில் அறிந்து கொள்ளுதல் சாலும்.

சமக்கிருதம கலப்பற்றமொழியெனச் சிலர் கருது கின்றனர். தமிழ், கோண்டு முதலிய மொழிகளிலிருந்து மிகப் பல சொற்களைச் சமஸ்கிருதம் இரவல் பெற்றிருக் கின்றது இந்து ஐரோப்பிய ஆரிய மொழிகளுக்குப் பொது வல்லாத மற்றைய சொற்கள் எல்லாம் இந்தியப் பூர்வ மொழிகளின் சொற்களேயாகும் என, மொழி ஆராய்ச்சி வல்லார் நுவல்கின்றனர் நகைச்சுவைக்கு எடுத்துக் காட்டு. "ஆரியர் பேசுந்தமிழ்" எனப் பேராசிரியர் ஓரிடத் தில் எடுத்துக்காட்டி யுள்ளார். அதனுல் ஆரியர் தமிழ்ச் சொற்களைத் திருத்தமுற உச்சரிக்க அறியாது பிழைபட உச்சரித்தார்கள் என்பது நன்கு விளங்கும் அவர்கள் தமிழைத் திராவிடம் என உச்சரித்தார்கள் என்றல மற் றைய தமிழ்ச்சொற்களை எவ்வாறு உச்சரித்திருப்பார்கள் என்பதை நாமே ஊகித்தறியலாகும். இவ்வாறு தமிழ்ச் சொற்கள் மிக மாறுபட்டு வடமொழியிற் சென்றேறியுள் ளனவாதலினுலேயே, நாம் அவைகளை எளிதிற் கண்டு பிடிக்க முடியவில்லை. சென்னையிலே அமபட்டன் பாலம் என ஒரு பாலமுள்ளது இதன் முன்னைய பெயர "ஹமில் டன் பிறிட்ஜ்" இது சொல்லுவோரது சொற்சோர்வினுல் அம்பட்டன் பாலம எனப்பட்டது பின்பு அமபட்டன் பாலம் ("Barber's bridge") "பார்பெர்ஸ் பிரிட்ஜ்" என ஆங்கிலப்படுத்தப்பட்டு இன்று மாரபோஸ் ப்ரிட்ஜ் என்றே வழங்குகின்றது. ஹமிலடன், அம்பட்டன் ஆனது போன்ற பலத் தமிழ்ச் சொற்களும வடமொழி யில் இருத்தல் கூடும்.

# பெரிய வெள்ளப்பெருக்குக்குப் பிற்பட்டமக்கள்
# அல்லது
# *ஹெமத்திய இந்திய மத்தியதரை மக்கட்குலம்

(எச். ஹெரஸ்)

யான் பல்லாண்டுகளாகப் பிற்கால இந்திய மக்களின் நாகரிகத்தைக் குறித்து, இந்தியாவிலும், ஸ்பெயின் நாட்டிலும் இருந்து ஆராயலானேன் அவ்வாராய்ச்சி, பெரிய வெள்ளப் பெருக்குக்குப் பிற்பட்ட மக்களின் வரலாற்றையும், அம்மக்கள் பல கிளைகளாகப் பிரிந்து சென்று பற்பல குலத்தினராகப் பெருகிய வகையையும் விளக்குவதாகின்றது யான் ஆராய்ந்து கண்ட அளவில், பழைய திராவிட மக்கள் தமது நாட்டைவிட்டு உவண்ணு, ஒடக்கோன் என்பவர்களின் தலைமையின் கீழ் சுமேரியாவை அடைந்து அங்குக் குடியேறிப் பெருகினுர்கள். இக்கருத்தைப் பழைய பபிலோனிய வரலாற்றாசிரியராகிய பெரசொஸ் என்பவரும் குறிப்பிட்டுள்ளார். சுமேரியாவிற் குடியேறிய மக்கள் மொகஞ்சதரோவிலுள்ளன போன்ற வீடுகளைக் கட்டினுர்கள். விவிலிய மறையின் ஆதிஆகமம் இந்நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுள்ளது. சுமேரிய வகுப்பைச் சேர்ந்த மக்களே சிரியாவிலும் குடியேறினுர்கள். கிதைதி ஆட்சிக்குத் தளம் இட்டவர்கள் இம்மக்களேயாவர். அங்கு நின்றும் பெயர்ந்த சிலமக்கள் மத்திய தரைக்கடல் ஓரங்களில் குடியேறினுர்கள். அவர்கள் பினிசியர் எனப்பட்டனர். இது பனையர் (Panis-Palm trees) என்னும் பெயரின் திரிபு. முற்காலத்தில் பெரிய வாணிகத்துணிவு உடையவர்களாயிருந்தவர்கள் இவர்களே. இவ்வினத்தினர் சிலர் கிரேக்க நாட்டிலும், இத்தாலியிலும் குடியேறி முறையே மீனவர், எதிருஸ்கர்

*The Hamitic Indo Mediterranean race Heras-new Review XIV.

என்னும் பெயர்களைப் பெற்றனர். திராவிடர்களிற் சிலர் யேமென் (Yemen) என்னும் இடத்திற் குடியேறியிருந்தார்கள்.

அவர்கள் இங்கு யேமெனியிலிருந்து செங்கடல் வழியாகச் சென்று எகிப்தில் குடியேறி வியக்கத்தக்க எகிப்திய நாகரீகத்தைக்கட்டி எழுப்பினார்கள். அவர்கள் ஆபிரிக்காவின் வடகரை வழியாகச் சென்று குடியேறி நமிதியர் பேர்பேரியர் என்னும் பெயர்களைப் பெறுவாராயினர். பின்பு அவர்கள் ஸ்பேயின் நாட்டிற் குடியேறியபோது உரோமர் அவர்களைச் சந்தித்து அவர்களுக்கு ஐபீரியர் எனப் பெயரிட்டனர். பின்பு ஐபீரிய மக்களுட் சிலர், வடக்கு நோக்கிச் சென்று மத்திய ஐரோப்பாவிலும், பிரிட்டிஷ் தீவுகளிலும் குடியேறி துருயிதர் (Druids) என பெயர் பெறுவாராயினர். பிற்காலங்களில் வந்த கெல்திய மககளாக இவர்களைக் கொண்டு, பிற்காலத்தவர்கள் மயங்குவாராயினர்.

பழைய நாகரிகங்களைக் கோலிய இச்சாதியினர் மத்திய தரைச்சாதியினர் எனப்படுவர். இச்சாதியாரின் நாகரிகங்கள் எல்லாம் ஒரே வேரினின்றும் முளைத்தன. அவை எல்லா முக்கியப் பகுதிகளிலும் ஒத்திருக்கின்றமையால், அவைகளைப் பிற்கால இந்திய மத்தியதரை நாகரிகம் எனக் கூறலாம்.

நோவாவின் குமாரனுகிய யபேத்திலிருந்து தோன்றியவர்கள் என்று சொல்லப்படும் ஆரிய மக்களையும் திராவிடரையுந் தொடுக்கும் தொடர்புகளும காணப்படுகின்றன. சமக்கிருத, திராவிட மொழிகளுக்கிடையில் பல ஒருமைப்பாடுகள் காணப்படுகின்றன. திராவிடச் சொற்களை ஒத்த உற்பத்தியை உடைய மிகப் பல சமக்கிருதச் சொற்கள் காணப்படுகின்றன. இவ்வகை ஒருமைப்பாடு திராவிட மொழிகளுக்கும் கிரேக்க இலத்தின் மொழிகளுக்குமிடையில் காணப்படுகின்றது. இதற்குக் காரணம் சமக்கிருதமும் திராவிடமும் ஒரே மொழியி

னின்றும் பிரிந்தமையேயாகும். திராவிடம் தனது பழைய ஒட்டுச் சொல் முறையான இயல்பைக் காப்பாற்றி வந்திருக்கிறது. சமக்கிருதம் இன்னொரு வகையில் வளர்ச்சி யடைந்து இக்காலத் தோற்றத்தை அடைந்துள்ளது.

*ஸ்தின்கோனோ (Mr. Sten konow) எற்றாஸ் மொழிக்கும் தமிழுக்கும் பல ஒருமைப்பாடுகள் இருப்பதைக் காட்டியுள்ளார்.

மனிதன் என்னும் மக்கள் வரலாற்று மாதவெளியீட்டில் (1906) பிளின்டர் பெற்றி (Flinders Petrie) என்பார் எகிப்தியரின் பழைய நகரமாகிய மெம்பிஸ் அழிபாடுகளில் இந்திய ஆடவர் மகளிரைக் காட்டும் ஓவியங்கள் இருப்பதைப்பற்றி எடுத்துக் கூறியுள்ளார்.

## மொகஞ்சதரோ நாகரிகமும் கீழ்நாட்டு ஆராய்ச்சியாளரும்

மேற்றிசை அறிஞர்களே மொகஞ்சதரோ நாகரிகத்தைப்பற்றி நன்கு ஆராய்ந்து கண்டவர்களாவர். ஆரிய வேதங்களைப்பற்றி ஆராய்ந்து உண்மைகளை வெளியிட்டவர்களும் அவர்களே. ஆராய்ச்சித் துறையில் கீழ்நாட்டவர்கள் மேல்நாட்டவரின் காற்சுவடுகளையே பின்பற்றி வருகின்றனர் மேல் நாட்டவர்கள் உண்மை காண்டல் ஒன்றனையே குறிக்கொண்டு ஆராய்ச்சி செய்வர். அவர்களுக்கு ஆரியரை உயர்த்தவேண்டும் என்றோ, திராவிடரை இறக்கவேண்டும் என்றோ குறிக்கோள் சிறிதும் இன்று. மேல்நாட்டு ஆசிரியர்கள் எல்லோரும் மொகஞ்சதரோ நாகரிகம் ஆரியர் வருகைக்கு முற்பட்டதென்றும், ஆரியர் வருகைக்குமுன் அங்கு வாழ்ந்தோர் திராவிடமக்கள் என்றும் கூறினர். கீழ்நாட்டு ஆராய்ச்சியாளரின் மனப்பான்மைகளுக்கு இது மாறுபட்டது. கீழ்நாட்டார்க்குத் தாம் கொண்டிருக்கும் கருத்துக்கு ஏற்ப ஆராய்ச்சிகள் முடிவு

* Kannada Passages in the Oxyrhyncus Papyri No. 413—Mythic Society quarterly Journal publication,

பெறவேண்டும்; இன்றேல் அவர்கள் அவைகளை ஏற்றுக் கொள்ளமாட்டார்கள். அவர்கள் மேல்நாட்டு ஆராய்ச்சியாளர் கூறியவைகளைப் புரட்ட முயல்வர். மொகஞ்சதரோ நாகரிகம் திராவிட மக்களுடையது என்று கூறப்பட்டதும், ஆரியரே இந்திய நாகரிகத்துக்கு அடிப்படை எனக் கனவு கண்டுகொண்டிருந்த ஒரு சாரார், மொகஞ்சதரோவில் ஆரியரின் நாகரிகத்துக்கு உரிய அடையாளங்கள் சில காணப்படுகின்றன, வேதங்களில் சில சான்றுகள் காணப்படுகின்றன என்று கூறுவாராயினர். இக்கூற்றுக்கள் ஒருபோதும் மேற்றிசை ஆராய்ச்சியாளரால் ஒப்புக்கொள்ளப்படவில்லை. மொகஞ்சதரோவில் சிவ வழிபாடு வேதங்களிலும் காணப்படுகின்றது என்றும், ஆதலால் சிவவழிபாடு திராவிடருக்குரியதன்று என்றும் ஒருவர் கூறினர். இன்னொருவர் அத்துணைப் பழங்காலத்திலேயே மக்கள் யோகத்தைப்பற்றி அறிந்திருக்கமாட்டார்கள் என்றனர். மொகஞ்சதரோ முத்திரையிற் காணப்பட்ட சிவன் வடிவம் யோகத்தில் இருப்பதாக அமைந்திருத்தலாலும், வேதங்கள் யோகத்தைப் பற்றி அறிந்திராமையாலும், அங்குக் காணப்பட்ட சிவன் வழிபாடு திராவிடருடையதே என முடிவு செய்யப்பட்டது. இவ்வாறு தமிழரினும் பார்க்க ஆரியரே நாகரிகத்திற் சிறந்தவர்கள், அவர்களே தமிழர்களுக்கு வழிகாட்டிகள் என்ற கருத்துக்களை நாட்டவேண்டும் என்னும் உணர்ச்சிவேகம் ஒரு சாரார் உள்ளத்தில் இருப்பதை நாம் காண்கின்றோம். தமிழர் ஆரியரினும் சிறந்தவர் எனக் கூறின் உடனே அதனை எதிர்க்க ஒரு கூட்டம் எப்பொழுதும் ஆயத்தமாக இருப்பதை நாம் எல்லோரும் அறிவோம். இவ்வுணர்ச்சியினால் எழும் ஆரவாரங்கள் ஆராய்ச்சி எனப்படா. சாதிப்பற்று என்றே கூறவேண்டும். நாட்டுப்பற்று சாதிப்பற்று என்பன சரித்திர ஆராய்ச்சியாளரை நடுநிலைமையினின்றும் அடி சறுக்கச் செய்துவிடுகின்றன என்று மேற்றிசை ஆராய்ச்சியாளர் கூறியுள்ளார்கள்.